உ

சிவமயம்

சேஷாத்திரி சிவனூர்

அருளிச்செய்த

# நாநாஜீவவாதக்கட்டளை

# அர்த்ததீபிகை.

இது

திருமழபாடியில் சுவானுபூதி மஹானுபாவராய்

எழுந்தருளியிருந்த

ஸ்ரீ சுயம்பிரகாச சுவாமிகள் இயற்றியுள்ளதை

இரண்டாம் பதிப்பாக

சுயம்பிரகாச சுவாமி மடம் தலைவர்

ஸ்ரீ ராமசாமி சுவாமிகளால்

பதிப்பிக்கப்பெற்ற

7—11—62

உ

சிவமயம்

சேஷாத்திரி சிவனார்

அருளிச்செய்த

# நாநாஜீவவாதக்கட்டளை

# அர்த்ததீபிகை.

இது

திருமழபாடியில் சுவானுபூதி மஹானுபாவராய்

எழுந்தருளியிருந்த

ஸ்ரீ சுயம்பிரகாச சுவாமிகள் இயற்றியுள்ளதை

இரண்டாம் பதிப்பாக

சுயம்பிரகாச சுவாமி மடம் தலைவர்

ஸ்ரீ ராமசாமி சுவாமிகளால்

பதிப்பிக்கப்பெற்றது.

ஸ்ரீ கதிரேசன் மின்னியல் அச்சகம் விருத்தாசலம் 1962.

உ

ஓம் தத்சத் :

அர்த்ததீபிகை இயற்றிய

# ஸ்ரீ சுயம்பிரகாச சுவாமிகள் சரித்திரம்.



இ:து 1924-இல் முதற்பதிப்பில் உள்ளது.

திருமழபாடியென்னும் திவ்வியக்ஷேத்திரத்தின்கண் றேறக்குறைய 130 வருஷத்திற்கு முன் ளாளர் மரபில் சுப்பராயபிள்ளை என்பவர் ஒருவரி தார். அவருக்கு ஆத்தம்மாள் என்கிற மனைவி ருந்தார். அவர்கள் பூர்வஞ் செய்த தவப்பேற்று ர்களுக்குப் புத்திரராக ஸ்ரீ சுயம்பிரகாச சுவாமிகள் வவதாரஞ் செய்தார்கள். இவர்களுக்கு பூர்வ கிருஷ்ணசுவாமி. ஸ்ரீ சுயம்பிரகாச சுவாமியென் ாமம் ஸ்ரீ குருமூர்த்தியாலிடப்பெற்றது. ஸ்ரீ சுவா பால்யத்திலேயே ஆகம புராணுதிகளில் மிகுந்த சியுடையவர்களா யிருந்து பிறகு அத்துவித ந்தை ஸ்தாபிக்க அத்துவித சாஸ்திரங்களில் ச்சியுடையவர்களாய் சிறந்து விளங்கினுர்கள்.

சகல ஜீவர்களும் கருமம் பக்திகளில் கிரமமாக அனுஷ்டித்துவர தாமும் கரும பக்தி மார்க்கங்களில் நடந்து காட்டியும் அத்துவித வுணர்ச்சி யுடையவர்களுக்கு வேதாந்த சித்தாந்தத்தை வுறுதியாக போதித்தும் வந்தார்கள். ஸ்ரீ சுவாமிகளும் மஹா மௌனத்தில் சிலகாலமிருந்து பிறகு லோகோபகாரமாய் சகச நிஷ்டையில் விதேககைவல்லியபரியந்த மிருந்தார்கள். அவதூத சந்நியாசியாயும் உள்ளபடி யாவரும் கண்காண பிர்ஹ்மநிஷ்டபரராளாயு மிருந்து கலியுகம் 4997–க்கு துன்முகி வருஷம் தைமீ அஸ்த நக்ஷத்திரத்தில் விதேக கைவல்லியத்தைப் பெற்றார்கள்.

மந்த அதிகாரிகள் எவருக்கும் உள்ளபடியான அத்துவிதவுணர்ச்சி எளிதிலுண்டாகும் வண்ணம் அத்துவித சாஸ்திரங்களுக்கு முதன்மையாக ஸ்ரீ சேஷாத்திரிசிவனார் திருவாய் மலர்ந்தருளிய ஸ்ரீ நாநாஜீவவாதக்கட்டளை யென்னுஞ் சாஸ்திரத்தில் மறைபட்டிருந்த விஷயங்களாகிய பதார்த்த விசேஷ வியாக்கியானங்களை தாம் பெற்றபேறு உலகம்பெற கிருபா நோக்கத்தினால் விரித்து அருளினார்கள். ஸ்ரீ சுவாமிகள் சிவன் முக்தி தசையில் இருந்த காலத்தில் அனேக



பக்குவான்மாக்களுக்குத் தக்கபடி உபதேசஞ்செய்து அவ்வுபதேசத்தைப்பெற்று ஸ்ரீ சுவாமிகளின் திருவடியை மறவாத சிடர்கள் இன்றும் ஒழுங்காக நல்ல அனுஷ்டானங்களில் ஒழுகி வருகிறார்களென்பதை மற்றை யாவரும் காணலாம்.

ஸ்ரீ சுவாமிகள் அருளிச்செய்த அத்துவித கீர்த்தனங்களில் (தில்லை அரன் குருவாய் வந்து நின்றான் நின்று அகம்பிர்ஹ்மாஸ்மி என்றான்) என்னுங் கீர்த்தனத்தை நோக்குமிடத்து குருஅரனே யானின்றான். ஏனென்றால் ஸ்ரீ சுவாமிகள் முதலில் பரோக்ஷ ஞானத்தில் திடமிருந்தும் அபரோக்ஷஞானம் கிடைக்கப் பெறுமலிருந்தகாலத்தில் ஒரு மகான் நிர்நிமித்தமாக சுவாமிகளைத் தேடிவந்து நாம் தக்ஷணாதேசம், உமக்காக இவ்விடம் வந்தோம், நம்மிடத்திலிருக்கிற இந்த சாஸ்திரத்தை உள்ளபடி விசாரித்தால் அபரோக்ஷஞானம் உண்டாகுமென்று அருளிச்செய்து பஞ்சதசப்ரகரணம் என்னும் சாஸ்திரத்தை சுவாமிகளுக்குக் கொடுத்துவிட்டுப்போய் விட்டார். அதை சுவாமிகளும் உள்ளபடி நம்பி விசாரித்ததில் சாக்ஷாத்கார ஞானம் அதுகாரணமா யடைந்தார்கள். அந்த

சாஸ்திரம் கொடுத்தவர்களை மறுபடியும் பார்ப்பதற்கு ஏதுவில்லாமலும் அவர்களுடைய ஊர் நாமம் தெரியாமலும் போய்விட்டதே ஸ்ரீ சுவாமிகள் பாடின கீர்த்தனத்திற்கு ஒற்றுமையாக யிருக்கிறது.

சுபம்.

ஷ சுவாமிகளின் பிரதம சிஷ்யர்.

ஆறுமுகசுவாமி.





உ

## இரண்டாம் பதிப்பு முகவுரை

வேதாந்த சம்பிரதாய ஆசிரியர்கள் இந்நூலை ஆரம்பத்தில் கற்க வேண்டிய தென்றும் தத்துவ ஆராய்ச்சிக்கு முக்கியமானதென்றும் கூறுவதற்கிணங்க இவ்வுரை பதார்த்தங்களும் விசேடார்த்தங்களும் தெளிவாக உள்ளன

ஜனனமரண சம்சார துக்கங்களான அனர்த்தம் நீங்கி பிர்ஹ்மானந்த பிராப்தியாகிய மோட்சமடைய விரும்புகின்ற முமூட்சுக்கள் இதிற்கூறிய தத்துவங்களின் சுபாவசித்தபேத இலக்கணங்களை உணர்வதற்கு சுலபமானது

தத்துவ மசிமகாவாக்கியத்தில் தத்பதப் பொருளான 36 தத்துவத்தில் ஈஸ்வரனுக்கு வாச்சியார்த்தம் 35 தத்துவமென்றும் இலட்சியார்த்தம் பிர்ஹ்மமென்றும் துவம்பதப்பொருளான 29 தத்துவத்தில் ஜீவனுக்கு வாச்சியார்த்தம் 28 தத்துவமென்றும் இலட்சியார்த்தம் ஆத்மா வென்றும், தத்பத துவம்பத இரண்டின் இலட்சியார்த்தம் ஒன்றேயென்னும் அசிபதப் பொருளான பிரஹ்மாத்மவைக் கியஞானனு

பவத்தை பிரதிபந்த மின்றி திடமாக அடைவதற் குரியது

மேலும் இவ்வுரை அத்தியாரோப அபவாதக் கிரமமாய் ஜீவேஸ்வர சகத்து தோற்றம் ஒடுக்கங் களைக் கூறுவதிலும் இன்றியமையாதது

தன் நிஜ ஸ்வரூபத்தை அறியும் வேட்கையுள்ள முமூட்சுக்கள் இவ்வுரையில் விசுவாசம் வைத்து தெளி வுற குருமுகமாய் ஆராய்ச்சி செய்து பிர்ஹ்மாத்ம வைக்கிய ஞானத்தைப்பெற்று சீவன் முக்தர்களாய் வாழ்ந்து மோட்சம் அடைவர் சித்தம்

சுவாமி முக்தானந்தா
வேதாந்தமடம், விருத்தாசலம்.



## சிறப்புப் பாயிரம்

இப்பியினி டையே யெழுமிர சதம்போ
லென்று மாயிலகி யின்பாகி
ஒப்பிடவேது மின்றிய பிரமத்
துற்றிடும் பகுதி முன்னுய
அப்பிரபஞ்ச முறைமையைத் தூல
வருந்ததி நியாயமே யென்னச்
செப்பினன் யாருந் தெளிவுறச்சேஷாத்
திரி சிவனென்னு மாதவனே,



உ
ஓம்தத்சத்
கணபதி துணை

# நாநா ஜீவவாதக் கட்டளை அர்த்த தீபிகை.

---

விநாயகர் துதி

எந்தநாளு மிடருரு தேகிடப்
பந்தபாசம் பற்றுரு தொழிந்திடத்
தந்திமாமுகத் தற்பர னற்பதஞ்
சொந்தமாகத் துதித்திடுவாமரோ.

ஸ்ரீ குகன் துதி

குகையெனு முள்ளந் தன்னிற்
கூசிடா தொளி த்தாய் நீயே
குகையினிற் றங்கி யுள்ளான்
குமரனு மென்னும் வேதம்
குகனென வதனு லுன்னைக்
கூறுவ ரெவரு மிங்கே
குகவென துள்ள மாய
குகையி னின் வெளியாவாயே

ஸ்ரீ சங்கரர் துதி

அங்கணன் கைலைவிட்டிவ் வவனியிலவதரித்து
நங்குரு மரபிற்கெல்லா முதற்குரு நாதனுகி
எங்கணும் வேதமார்க்க மெழில்பெறச் செய்தா
னந்தச்
சங்கரபகவற்பாத சம்புதாண் முடிமேற்கொள்
வாம்.

ஸ்ரீ சற்குரு துதி

பாசமனைத்தையுந் தனித்தனிப்பரிந்திட நீக்கி
நேசமாகிய வறிவுருநீ யெனக்காட்டிப்
பேசுமேழ்வகைப் பிறப்புனக்கிலையெனப்பேசித்
தூசுநீக்கிய சுயம்பிரகாசனைத் தொழுவாம்.

---



உ

ஓம்தத்சத்

கணபதி துணை



# நானா ஜீவவாதக் கட்டளை அர்த்ததீபிகை.

---

நூல்

**அவதாரிகை—** வடமொழி தென்மொழிகளில் வல்லவராகிய இந்நூலாசிரியர் தாமடைந்த அப்பிரதிபந்தாபரோக்ஷ சாக்ஷாத்கார ஞானத்தை சகல முமூட்சுக்களும் எளிதிலடைந்து சுகஸ்வ ரூபியாகும் பொருட்டு இருக்கு, எசுர், சாமம், அதர்வணமென்னும்

சதுர்வேதத்தினுள் மூன்றும் வேதமாகிய சாம வேதத்தின் முடிவாகிய சாந்தோக்கிய உபநிடதத்தில் பிரதிபாதிக்கப்படுகின்ற தத்துவமசி மகாவாக்கியத்தின் அர்த்தத்தை இச்சாத்திரத்தில் அத்தியாரோப அபவாதக்கிரமமாகக் கூறுகின்ருர்.

---

## நாநா ஜீவவாதக் கட்டளை யாவன

கர்த்தா, போக்தா, ஞாதா என்கின்ற நானுவிதமாகிய ஜீவபேதவேறுபாடுகளை, அகர்த்தா, அபோக்தா, அசங்கன், சின்மாத்திரன் என்கின்ற தத்துவஞானத்தினுல் வாதித்து ஏகஸ்வரூபமாயிருக்கின்ற வஸ்துவைத் தெரிவிக்கின்றதற்குப் படிக்கிரமமாயிருத்தலினுல் நாநாஜீவவாதக்கட்டளை யென்று கூறப்படும்.

சுத்தம்—ஜீவேஸ்வர ஜகத்துக்களாகிய முப்பத்தைந்து தத்துவங்களுக்குமுள்ள அசுத்தங்கள் நம்மைப் பற்றுமல் நிர்மலமாயிருத்தலினுல் சுத்தமெனப்படும். இந்த முப்பத்தைந்து தத்துவங்களுக்குள்,

ஜீவனுக்கசுத்தம் யாதெனில் :—ஜாதி, வருணம், ஆச்சிரமம், அதன் தன்மாதன்மம் அதன் பலமான சுவர்க்கநரகம், அதன் சேடமான அனந்தகோடி பவ



மரணுதிகளில் தொடக்குற்றலைகின்றதுவே அசுத்தமெனப்படும்.

ஈஸ்வரனுக்கசுத்தம் யாதெனில் :-கிருபை, அவதாரம், மாச்சரியம் இவைகளில் தொடக்குற்றலைகின்றதுவே அசுத்தமெனப்படும்.

மாயைக்கசுத்தம் யாதெனில் :— ஜகத்துக்குக் காரணமாயிருக்கின்றதுவே அசுத்தமெனப்படும்.

அவித்தைக்கசுத்தம் யாதெனில் :— அதிஷ்டானத்தை மறைக்கின்றபடியினுலும், தத்துவஞானத்தினுல் கெட்டுப்போகின்றபடியினுலும் அசுத்தமெனப்படும்.

ஆறு தத்துவமாகிய ஸ்தூல சரீரத்திற்கசுத்தம் யாதெனில்;—நவத் துவாரங்களின் வழியே சீ, இரத்தம், பித்தம், கோழை, குறும்பி, மலம், சலம், மூத்திரம், அழுக்கு முதலியவைகள் பொருந்தி ஒழுகுகின்றதுவே அசுத்தமெனப்படும்.

இருபது தத்துவமாகிய சூட்சும சரீரத்திற்கசுத்தம் யாதெனில் :—காசம், படலம், காமக்குரோதம் முதலியவைகளே அசுத்தமெனப்படும், பஞ்சபூதங்களுக்குள்,

பிருதிவிக்கசுத்தம் யாதெனில் :—மலமூத்திரம், குப்பை, சேரி, மயானம் முதலியவைகளே அசுத்தமெனப் படும்.

அப்புவுக்கசுத்தம் யாதெனில் :—அலை, திவலை, நுரை, குமிழி, சேறு, கலங்கல், பாசி முதலியவைகளே அசுத்தமெனப்படும்.

அக்கினிக்கசுத்தம் யாதெனில் :—புகை, பொறி, பாக முதலியவைகளே அசுத்தமெனப்படும்.

வாயுவுக்கசுத்தம் யாதெனில் :—நற்கந்தம், துர்க்கந்தம், தூளி முதலியவைகளே அசுத்தமெனப்படும்.

ஆகாசத்துக்கசுத்தம் யாதெனில் :—இடி, மின்னல், மேகப்படலமுதலியவைகளே அசுத்தமெனப்படும்.

இவைகளுக்கு விலக்ஷணமாக இருக்கின்ற நாமிவைகளுடன் கூடியிருந்தும் இவைகளினசுத்தங்கள் நம்மைப் பற்ருதபடியினுலும் இவைகள் நமது விவர்த்தமானபடியினுலும் இவைகளுக்குள்ள அசுத்தங்களின்றி பரிசுத்தமாய் மேலாய்த் தானேதானுய் இருத்தலினுல் நம்மை சுத்தமெனப்படும்,



பிரஹ்மமென்றது:—பெரிதுக்கெல்லாம் பெரிதாயும் நித்த, சுத்த புத்த, முத்த, சத்தியபரமானந்தாத்துவித இலக்ஷணமாக யிருப்பதினுல் பிரஹ்மமென்பதாம்.

பெரிதுக்கெல்லாம் பெரிதாவன:—ஒரு கிரகத்தைக் குறித்து ஊர் பெரிது. ஊரைக்குறித்து ஒரு பட்டணம் பெரிது. பட்டணத்தைக் குறித்து ஒரு சீமை பெரிது. சீமையைக்குறித்து ஒரு தேசம் பெரிது. தேசத்தைக் குறித்து ஒரு புவனம் பெரிது, புவனத்தைக்குறித்து ஒரு அண்டம் பெரிது. அண்டத்தைக்குறித்து விக்ஷேப சத்தி பெரிது. இவைகளையெல்லாங்குறித்து மாயை பெரிது. அப்படிப்பட்ட மாயையும் நம்மிடத்தில் ஏக தேசமாய்த் தோன்றி ஒடுங்குகின்றபடியினுல் நாமே பெரிதுக்கெல்லாம் பெரிதென்பதாம்.

நித்தமென்றது:— பிராகாபாவம், பிரத்தொம்சாபாவம், அன்னியோன்னியாபாவம், அத்தியந்தாபாவம் என்கின்ற இன்ஞன்கபாவமுமற்றுச் சதோதயமாய் விளங்குகின்றபடியால் நித்தமென்றது
அவையாவன:—

குலாலவட்டத்திலிருக்கும் மிருத்திகாபிண்டத்தைப் பார்த்து இதிற் கடமுன்னில்லை என்றறிவதுவே பிராகாபாவம்.

உண்டான கடம் பின்துவம்சமானதால் அந்த மிருத்திகையைத்தவிர இல்லையென்றறிவதுவே பிரத்தொம்சாபாவம்.

கடத்திற்படமும் படத்திற்கடமும் காலத்திரயத்திலுமில்லை யென்றறிவதுவே அன்னியோன்னியாபாவம்.

ககனாரவிந்தம் ஒருக்காலுமில்லை யென்றறிவதுவே அத்தியந்தாபாவம்.

இவைகளின் சொரூப அபிப்பிராயமாவன,

சிருஷ்டிக்குமுன் ஜகம் சத்தாமாத்திரமான பிரஹ்மசொரூபமாக இருந்தபடியினால் ஜீவேஸ்வர ஜகத்தென்கிறமாயை அந்த பிரஹ்மத்தைத்தவிர இல்லையென்றறிவதுவே பிராகாபாவம்.

கற்பிதமாகத் தோற்றப்பட்ட இந்தமாயை அனாதித்துவமென்று சாஸ்திரங்களில் கூறப்பட்டிருந்தாலும் விசாரக்ஞானமான விருத்திஞானத்தினால் றகிக்கப்பட்டனித்தியமாய்ப் போய்விட்டதால் பின் கற்பாந்தத்திலும் உண்டாகமாட்டாதென்றறிவதுவே பிரத்தொம்சாபாவம்.



பிரஹ்மத்திற்குள்ள சச்சிதானந்த ஸ்வரூப இலக்ஷணம் மாயையினிடத்திலும் மாயைக்குள்ள அசத்து சடம் துக்கத்துவஇலக்ஷணம் பிரஹ்மத்தினிடத்திலும் இல்லாதபடியினால் அம்மாயாஸ்வரூபத்தில் பிரஹ்மஸ்வரூபமில்லை, பிரஹ்மஸ்வரூபத்தில் மாயாஸ்வரூபமில்லையென்றறிகிற திடம் வந்ததுவே அன்னியோன்னியாபாவம்.

மாயையென்றும் ஜீவேஸ்வர ஜகத்தென்றும் நாமரூபமாய்ச் சொன்னாலும் நினைத்தாலும் சுத்தமித்தையே. அஃதெப்படியென்றால் ஆகாயத்தில் தாமரை பூத்ததென்று நினைவிற்றோன்றினாலும் அஃதெப்படியில்லையோ அதுபோல மாயையென்று நினைவில் வந்தாலும் காலத்திரயத்தினுமில்லை யென்றறிகிற திடம் வந்ததுவே அத்தியந்தாபாவம்.

இந்நான்கபாவமு மற்றுச் சதோதயமாயிருத்தலினால் நித்தமெனப்படும்.

சுத்தமென்றது :— பஞ்சபூத பௌதிகங்களுக்குள்ள மலமற்று நிர்மலமாயிருத்தலினால் சுத்தமெனப்படும்,

புத்தமென்றது :— அந்தக்கரண அறிவைப்போற்றேன்றிற்றேன்றி மறையாமல் எப்பொழுதும் ஒருபடித்தாய் அறிவாயிருந்து விளங்குகின்றதால் புத்தமெனப்படும்.

முத்தமென்றது:—அஞ்ஞானமும்அதன் காரியமுமான சகல பாசங்களும் விடுபட்டு இருப்பதால் முத்தமெனப்படும்.

சத்தியமென்றது:—தினம், மாதம், வருடம், காலம் கற்பம், ஜனனங்கடோறும் வராநின்ற அவஸ்தாத்திரய பிரபஞ்சங்களில் தோற்றுகின்ற பஞ்சபூத பௌதிகங்களுக்கு விலக்ஷணமாகி அவைகளுண்டாவதற்கு முன்னும் அழிந்த பின்னும், கெடாமல் ஒரே பிரகாரமாய் இருப்பதால் சத்தியமெனப்படும்.

பரமானந்தமென்றது :— எதையெதைக் கைவிட்டாலும் தன்னைக் கைவிடப்படாத அதிகப் பிரியவஸ்துவாதலால் பரமானந்தமெனப்படும்.

அத்துவிதமென்றது :— சசாதீய, விசாதீய, சுவகதபேதரகிதமாயிருக்கின்றதால் அத்துவிதமெனப்படும் அதாவது,



விருக்ஷத்திற்கு விருக்ஷாந்தரஞ் சசாதீயம், விருக்ஷத்திற்கு பாஷாணம் விசாதீயம், அதன் பத்திரபுஷ்பபலாதிகள் சுவகதபேதம்.

தாஷ்டாந்தம்:—

பிரஹ்மத்திற்கு இரண்டாவது வஸ்து இல்லாதபடியினல் சசாதீயமெனக்கூடாது. பிரஹ்மத்திற்கு ஜகத்து அசத்தானபடியினல் விசாதீயமெனக்கூடாது. பிரஹ்மம் நிரவயவமானபடியினல்சுவகதபேதமெனக்கூடாது. இந்த துவிதத்திரயமற்றிருப்பதினல் அத்துவிதமெனப்படும்.

இத்தியாதி இலக்ஷணங்களுடையதால் நம்மை பிரஹ்மம் என்பதாம்.

இருக்கின்ற—இராநின்ற

சர்வசாக்ஷியினிடத்தில்—சர்வத்தையும் சான்றாக அறிகின்ற தன்னிடத்தில், சான்றாக அறிகின்றதாவது, தற்பதம், தொம்பதம், அசிபதம் என்கின்ற பதத்திரயங்களினிலக்கியார்த்தமாக இருந்து அவைகளின்

முக்கியார்த்தங்களாகிய சகலத்தையும் சாக்ஷியாக அறிகின்றதனல் சர்வசாக்ஷியென்பதாம்.

அக்கினியிற் சூடுபோல—தேயுவுக்கன்னியமாகாதிருக்கின்ற உஷ்ண சத்தியைப்போல

அபின்னமாக ஒரு சக்தியுண்டு—ஒன்ருக ஒரு சிற்சத்தியுளது

அந்தச்சத்தி—அங்ஙனங்கூறிய சிற்சத்தியானது

அவ்வதீதப்பிரஹ்மத்தில்—அந்த வாக்குககும் மனதுக்கும் எட்டாத பிரஹ்மத்தில்

அடங்கியிருக்கும்போது — அக்கினியிலுள்ள உஷ்ண சக்தியை மணிமந்திராதியால் ஸ்தம்பனம் செய்யுமிடத்தில் உஷ்ணந்தணிந்தெப்படி அடங்கியிருக்குமோ அப்படிப்போல் விசாரக்ஞானத்தினல் ஒடுங்கியிருக்குங்காலையில்

அதற்கு—அவ்வதீதப் பிரஹ்மத்திற்கு



சுத்தப்பிரஹ்மமென்று பெயர்--மலரகிதமான பிரஹ்மமென்று நாமமாம்,

இந்தச்சத்தி—இங்ஙனம் அடங்கியிருந்த இந்த சிற்சத்தியானது

விசிரிம்பித்து—ஆகாயத்தினின்று மாருதம் வெளிப்படுதல் போலவும், அக்கினியினின்று தூமம் வெளிப்படுதல் போலவும், ஜலத்தினின்று அலை முதலியவை வெளிப்படுதல் போலவும், மேகத்தினின்று மின்னல் வெளிப்படுதல் போலவும் வெளிப்பட்டு

சுத்தப் பிரஹ்மத்தை—முற்கூறிய மலரகிதமான பிரஹ்மத்தை

வியாபிக்கும்போது—ஆகாயத்தை மாருதம் வளைந்துகொள்ளுதல் போலவும், அக்கினியை தூமம் வளைந்துகொள்ளுதல்போலவும், அப்புவை அலையாதி மூடிக்கொள்ளுதல்போலவும், மேகத்தை மின்னல் வளைந்துகொள்ளுதல்போலவும் வளைந்துகொள்ளும் காலையில்

அப்பிரஹ்மம்—அந்த சுத்தப்பிரஹ்மம்

பரைவியாபகத்துக்குள்—அந்தப் பராசக்தியினது அகண்டாதீத ஸ்தானமாகிய சிவதுரியாவஸ்தைக்குள்

இருந்தபடியினலே—அபிமானியாக இருந்து தற்பிரகாசமாய் விளங்குகையினலே

அதற்கு—அந்த சுத்தப்பிரஹ்மத்திற்கு

பரப்பிரஹ்மமென்று பெயராம் — பரப்பிரஹ்மமெனவும், குருவெனவும், சிவமெனவும் நாமமாம்

இலட்சணசூனியமாய்—வடிவமில்லாததாய்

இருக்கின்ற—ஒன்பது விதங்களினுலும் நிர்ணயிக்கக்கூடாததாக இருக்கின்ற

இந்த சத்திக்கு—இங்ஙனங்கூறிய பராசத்திக்கு இந்த சத்தியை எப்படி ஒன்பது விதங்களினுலும் நிர்ணயிக்கக் கூடாதெனில் சத்து. அசத்து, சதசத்து, சாவயவம், நிரவயவம், சாவயவநிரவயவம், பின்னம், அபின்னம், பின்னுபின்னமென்கிற இந்த ஒன்பது விதங்களினுலும் நிர்ணயிக்கக்கூடாததாம்.



அஃதெங்ஙனமெனில்,

சத்தென்ருல் :— திரிகாலத்திநும் பழுதையைப் போல் கெடாதிருத்தல் வேண்டும் தத்துவஞானத்தினல் கெட்டுப்போகின்றதால் சத்துமன்று.

அசத்தென்ருல் :- முயற்கொம்பைப்போற் காலத்திரயத்தினும் இல்லாதிருக்கவேண்டும். அகம் அஞ்ஞானியென்கின்ற அனுபவமிருக்கின்றதால் அசத்துமன்று.

சதசததென்ருல் ;— அந்தகாரமும் சூரியனும் ஒன்ருயிருக்கின்றதென்பது போல விருத்தமானதால் சதசத்துமன்று.

சாவயவமென்ருல் ;— அவயவசம்பந்தமாயிருக்க வேண்டும். அப்படியே யிருக்கின்றதென்ருல் இந்திரசாலக்காரனிட சத்திக்கெப்படி சொரூபமின்ருே அப்படிப் போலவும், தீபத்தின் பொறியையுண்டாக்குகிறசத்திக்கெப்படி சொரூபமின்ருே அப்படிப்போலவும், ஜகத்காரணமாயிருக்கின்ற சத்திக்குச் சொரூபமின்மையினல் சாவயவமுமன்று.

நிரவயவமென்றால் :— ககனாவிந்தம்போல் தோன்றாமற் போகவேண்டும், ஜீவேஸ்வர ஜகத்தாகத் தோற்றுகையினால் நிரவயவமுமன்று.

சாவயவநிரவயவமென்றால் :- ஸ்திரீயும் புருஷனும் ஒன்றாயிருக்குதென்கிறது போல ஒன்றுக்கு இரண்டு பக்ஷம் கூடாததாகையால் சாவயவநிரவயவமுமன்று.

பின்னமென்றால் :— பிதாவும் புத்திரனும் போல் ஆத்மாவுக்கு வேறாய்த் தோற்றவேண்டும். அப்படியே தோற்றுகின்றதென்றால் அத்துவிதத்துக்கானி வரும், வந்தால் வரட்டுமென்றால். ஆத்மா அத்விதியரென்கின்ற சுருதிக்கு விரோதம் வரும். இம்மாத்திரமுமன்று, ஆத்ம சத்தையைத்தவிர மாயைக்கிருப்பின்மையால் பின்னமுமன்று.

அபின்னமென்றால் :— நிம்பபத்திரமும் கசப்பும் போல் ஒன்றாயிருத்தல் வேண்டும். அப்படியே யிருக்கின்றதென்றால், ஆத்மாவில் சத்தியில்லாமல் போகவேண்டும். போனால்போகட்டுமென்றால், ஆத்மா அநந்த



சத்திமான் என்கின்ற சுருதிக்கு விரோதம் வரும். வந்தால் வரட்டுமென்றால், உப்பளத்தில் விழுந்த மாம்பழம் தந்தன்மைகெட்டு அத்தன்மையானதுபோல் ஆத்மாவுக்கு அசத்துசடந் துக்கத்துவமும், மாயைக்கு சச்சிதானந்தசொரூப இலக்ஷணமும் வரும். வந்தால் வரட்டுமென்றால் மாயையென்று சொல்லாமல் பிரஹ்மமென்றே சொல்லவேண்டும். அப்படியே சொல்லப்போகுதென்பையாகில் ஆத்மநாமத்துக்கு வெதிர்த்தமாக அஞ்ஞானமென்றும்மாயையென்றும்,பொய்யுருவியென்றும், தமசென்றும், மோகமென்றும், அநேகம் பரியாயநாமங்கள் கூறப்படுவதால் அபின்னமுமன்று.

9. பின்னபின்னமென்றால், பிராமணனும் சூத்திரனுமொன்றாயிருக்குதென்கின்றதுபோல் விருத்தமானதால் பின்னபின்னமுமன்று.

இப்படி ஒன்பதுவிதங்களினாலும் இந்த சத்தியை நிர்ணயிக்கக்கூடாதென்றறிக.

பிரஹ்மத்தினுடைய சன்னிதானத்தில்—இந்தப் பரப்பிரஹ்மத்தினது முன்னிலையில்

புருஷசமுகத்திலே—நெடுந்தூரஞ்சென்று நெடுங்காலங் கழித்து வந்த தன் தலைவனது முன்னிலையில்

ஸ்திரீக்கு—அவனது தலைவிக்கு

இன்பம் சனித்தாற்போல — கச்சடர்ந்து மயிர்க்கூச் செறிந்து தேகம் புளகுற்று இரதிகாங்கிஷையுண்டா னாற்போல

அவிகிருத—வேறுபாடின்றிய

சத்துவ—சுத்த சாத்வீக

ரஜஸு—சுத்தராஜஸு

தமோ—சுத்ததாமச

குணங்கள் உண்டாயின—திரிகுணங்கள் உடைத்தாயின

இவற்றில் சுத்த சத்துவத்துக்குஇவைகளில் சுத்த சாத்வீக குணத்திற்கு



ஆனந்தரூப சத்தியென்று பெயர்—சுகரூபசத்தியென்று நாமமாம்.

இதற்கு ஆனந்தரூபசத்தியென்று நாமம்வந்த காரண மென்னவெனில் :— சர்வ சராசரப் பிரபஞ்சங்களும் தானாகி விளங்குகின்றோமென்னும் உணர்வையும் தன்னையும் மறந்து உபசமனமாயதீதப்பட்டு நிற்பதால் ஆனந்தரூப சத்தி யென்று நாமம் வந்தது.

சுத்த ரஜஸுக்கு—சுத்தரஜோ குணத்திற்கு

சித்துரூபசத்தியென்றுபெயர்—அறிவுரூப சத்தியென்று நாமமாம்.

அதற்கு சித்துரூபசத்தியென்று நாமம் வந்த காரண மென்னவெனில்:— சத்தஸ்பரிச ரூபரஸ கந்தமென்னப் பட்ட ஐவகைப்பொருளால் சமைவதான சகல புவன சராசரப்பிரபஞ்சங்களையும் விழுங்கித்தானே சுகஸ்வ ரூபமாக பிரகாசித்து நிற்பதால் அதற்கு சித்துரூப சத்தியென்று நாமம் வந்தது.

சுத்த தமஸிக்கு—சுத்த தமோகுணத்திற்கு

சத்துரூபசத்தியென்று பெயர்—இருப்புரூப சத்தியென்று நாமமாம்

இதற்கு சத்துரூபசத்தியென்று நாமம் வந்த காரணமென்னவெனில்:— காண்பானும் காட்சிப் படுகின்ற சர்வசராசரப்பிரபஞ்சங்களுமாகிய விவற்றின் உள்ளும் புறம்பும் தானேதானாய் விளங்கிநிற்பதால் சத்துரூப சத்தியென்று நாமம் வந்தது.

இவற்றில் காரணமான—இவைகளில் சங்கற்பங்களுக்கெல்லா மூலமாகிய

ஆனந்தரூபசத்தியுடனே—சுகரூப சத்தியுடனே

பரப்பிரஹ்மம் கூடி—பரப்பிரஹ்மம் சேர்ந்து பரப்பிரஹ்ம மென்றது:—சடமாயுற்பத்திநாசமுள்ள தான அறுவகை பிரஹ்மத்திற்கும் பெரிதாயிருப் பதால் பரப்பிரஹ்மமென்றது.



அறுவகைப் பிரஹ்மமாவன:—

நான்கு வருணத்திலும் பெரிதாயிருப்பதால் பிராமணன் ஒரு பிரஹ்மம். நூலனைத்திற்கும் பெரிதாயிருப்பதால் வேதம் ஒரு பிரஹ்மம். மந்திரங்களுக்குப் பெரிதாயிருப்பதால் பிரணவம் ஒரு பிரஹ்மம். தேவர்களுக்குப் பெரிதாயிருப்பதால் பிரமன் ஒரு பிரஹ்மம். பிரமனுக்குப் பெரிதாயிருப்பதால் விஷ்ணு ஒரு பிரஹ்மம், விஷ்ணுவுக்குப் பெரிதா யிருப்பதால் உருத்திரன் ஒரு பிரஹ்மம்,

இந்த அறுவகைப் பிரஹ்மத்திற்கும் பெரிதாயும், உற்பத்தி நாசமில்லாததாகியும், சித்தாகியுமிருப்பதால் பரப்பிரஹ்மமென்றது.

அந்தப்பரப்பிரஹ்மம்

சர்வானந்தமென்னும்—உபசாந்தஸ்தானமரகிய சர்வப்பிரியமென்கின்ற

சுழுத்தி யவஸ்தையை—சிவசுழுத்தியவஸ்தையை

அடைகின்றபோது—அபிமானியாய் சம்பந்திக்குங்காலை யில்

பரப்பிரஹ்மமென்கின்ற பெயர் போய் — பரப்பிரஹ்ம மென்கின்ற நாமம் நீங்கி

பரமானந்தரென்கின்ற பெயர் வந்தது — பரமப்பிரிய ரென்னும் நாமமுண்டாயிற்று.

இவரைப் பரமானந்தரென்றது :— பரமானந்தமாகத் தோற்றப்பட்ட காணி முதலிய ஏழையும் கைவிட்டாலும் தன்னைக்கைவிடப்படாத பேரானந்த ஸ்வரூபமாயிருத்த லால் பரமானந்தரென்றது.

காணி முதலியவாவன :—

காணி, வீடு, மாடு. ஆடு, தனதான்னியாதிகள் பரமா னந்தமாகத் தோற்றுகின்றன.

இதற்கு இராஜன் சோரன்,கோளன், துஷ்டனுதியால் பீடை வந்தவிடத்தில் இவைகளைக் கைவிட்டு கையிலடங் கின தனமாத்திரம் பரமானந்தமாம்.



அஃதும் புத்திரனுக்கு வியாதி விலங்குற்றவிடத்தில் செலவிட்டு புத்திரனைப் பேணுகையால் புத்திரனே பரமா னந்தமாம்.

அப்புத்திரனுடன் தானிருந்த வீட்டிற் றீபத்தியவிடத் தும் அவனுல் தனக்கு விலங்காதியுற்றவிடத்தும் புத்திர னைக் கைவிட்டு தேகத்தைப் பேணுகையாற் றேகம் பரமானந்தமாம்

தேகமும் தூளிக்காற்று கொதுகாதியுற்றவிடத்து தேகத்தை யுபேக்ஷித்து இந்திரியங்களைப் பேணுகை யால் இந்திரியம் பரமானந்தமாம்,

அவ்விந்திரியமும் யோசனைதியானம் செய்யுங்காலை யில் மனது ஏகாக்கிரகப்படச் செய்கின்றதைக் குறித்து இந்திரியங்களை அடக்கிவிடப்படுவதால் அந்தக்கரணம் பரமானந்தமாம்.

அவ்வந்தக்கரணமும் நித்திரை மனுேலயஞ்செய்யு மிடத்தில் ஜீவனுக்குச் சுகமுண்டாக்குகின்றதைக் குறித் து விக்ஷேபமான சங்கற்பத்தை யொடுக்கிவிடப்படுவ தால் ஜீவன் பரமானந்தமாம்,

அச்சீவனும் மரணவேதனைப் படுங்காலத்தினும் ஒன்றைச்சுட்டும்போதும் தற்போதமாய்க்கும் காலத்தினும் ஜீவத்துவம் நீங்கி அசங்ககூடஸ்தராகிய தானேயவைகளுக்கெல்லாம் மேலான பரமானந்தஸ்வரூபமாதலால் பரமானந்தரென்பதாம்

இந்தப்பரமானந்தர்—இங்ஙனங்கூறிய பரமப்பிரியர்

சித்துருபசத்தியுடனேகூடி — அறிவுருபசத்தியுடனே புணர்ந்து

சர்வப்பிரகாசமென்னும் — விஸ்வகிராசஸ்தானமாகிய சர்வப்பிரகாசமென்கின்ற

சொப்பனவஸ்தையை—சிவ சொப்பனவஸ்தையை

அடைகின்றபோது—அபிமானியாகப் பொருந்துங்காலையில்

பரமானந்தரென்னும் பெயர்போய் — பரமப்பிரியரென்னும் நாமம் நீங்கி



தேஜோமயரென்னும் பெயர் வந்தது—பிரகாச ஸ்வரூபனென்கின்ற நாமம் வந்தது.

இவரைத்தேஜோமயரென்றது :. ஆரோபப்பிரகாசமாகத் தோற்றுகின்ற சூரியாதியஷ்டப்பிரகாசங்களுக்கும் அதிஷ்டானப்பிரகாசமாகவிருந்து அவைகளை விளக்கியறிகின்றதனுல் தேஜோமயரென்றது.

சூரியாதியாவன :—

சூரியன், சந்திரன், அக்கினி, மின்னல், நக்ஷத்திரமிவைகள் மிகுந்த பிரகாசமுடையன,

அஃதுயாதினுலெனில்:-பஞ்மபூதபௌதிகங்களுக்குளிந்தச் சூரியன் முதலியவைகளுக்கு அக்கினியினம்சம் அதிகமாதலால் மிகுந்த பிரகாசமுடையது. இந்த பஞ்சப்பிரகாசங்களினும் இவைகளை விளக்கியறிகின்ற சட்சு இந்திரியமே மிகுந்த தேஜசுடையது. இந்த சட்சு இந்திரியத்தினும் இவைகளினன்வயவெதிரேகங்களையறிகின்ற அந்தக்கரணங்களே சோதிசுடையது. இந்த அந்தக்கரணத்தினும் இவைகளின் விகாசசங்கோசங்

களையறிகின்ற ஜீவனே ஒளியுடையது. இந்த ஜீவனிலும் இந்த ஜீவனானவன் கடத்தைச்சுட்டும்போது படத்தை மறத்தலும், படத்தைச்சுட்டும்போது கடத்தை மறத்தலும் உபேக்ஷாவேளையிலில்லா திருத்தலையும் மயங்குதலறிவறியாமையாயிருத்தலையும் அறிகின்ற சுவயம்பிரகாச சைதன்னியமாகிய தானே இந்த அஷ்டப்பிரகாசங்களுக்கும் அதிஷ்டானப் பிரகாசமாக இருந்து விளக்கியறிகின்றபடியினால் தேஜோமயரென்றது.

இந்த தேஜோமயர் — இங்ஙனங்கூறிய பிரகாசஸ்வரூபன்.

சத்துரூப சத்தியுடனேகூடி — இருப்புரூப சத்தியுடன் பொருந்தி

சர்வவியாபகமென்னும் — சம்பூரண ஸ்தானமாகிய சர்வவியாபகமென்கின்ற

சாக்கிராவஸ்தையை—சிவ சாக்கிராவஸ்தையை

அடைகின்றபோது — அபிமானியாகச் சேருங்காலையில்



தேஜோமயரென்னும்—பிரகாச ஸ்வரூபரென்கின்ற

பெயர்போய்—நாமம் நீங்கி

பரிபூரணரென்னும் பெயர்வந்தது—அபரிச்சின்னனென்கின்றதிரிவிதப்பரிச்சேத ரகிதராயிருக்கின்றதினால் பரிபூரணரென்ற நாமம்வந்தது.

இவரைப் பரிபூரணரென்றது :—

திரிவிதப்பரிச்சேதமாவன:— தேசமும் காலமும் வஸ்துவுமாகிய இந்த மூன்றையும் திரிவிதப் பரிச்சேதமென்பர்.

அஃது ஒரு விசேடம் இரண்டுவிசேடம் போதாதோ மூன்றுவிசேடம் யாதுக்கென்னில் :—

தேசத்தினால் அபரிச்சின்னத்துவம் பூரணத்துவமென்றால், ஆகாயம் எல்லா தேசத்தினுமிருக்கின்றமையால் அதற்குப் பூரணத்துவம் வரும் அதை நிராகரிக்கும்பொருட்டு காலபரிச்சேதம் சொல்லப்பட்டது.

காலத்தினலாகாயத்துக்குப் பரிச்சின்னத்துவமெப்படி யென்னில் :—

ஆகாயமானது சிருஷ்டிகாலத்தி லுண்டானதாகிப் பிரளகாலத்தில் நசிக்கின்றமையினல் அபரிச்சின்னத்துவமல்ல. தேசத்தினலும் காலத்தினலும் விபுவாயிருக்கின்றமையாலும் தன்னலே தனக்குப் பரிச்சின்னத்துவமில்லாமையாலும் காலத்திற்குப் பூரணத்துவம் வரும். அதை நிராகரிக்கும்பொருட்டு வஸ்து பரிச்சேதம் சொல்லப்பட்டது.

வஸ்துவினல் காலத்திற்குப் பரிச்சின்னத்துவ மெப்படி யென்னில்:—

காலமாகாயாதிவஸ்துக்களாகாமையாற் காலம் பூரணமன்று.

ஆகையால்,

இந்தத்திரிவிதப்பரிசேதரகிதமாயிருப்பதால் பரிபூரணமெனப்படும்.



வின:— யானிந்த தேசத்திலிருக்கின்றேன் அந்த தேசத்திலில்லையென்றும், யானிந்த காலத்திற் பிறந்தேன் இன்னும் சில காலத்திலிறந்துலிடுவேனென்றும், யான் பிரிதிவியாதி வஸ்துக்களாகவில்லையென்றும், ஆன்மாவினிடத்தில் தோற்றப்படுவதால் ஆத்மாவிற்குத் திரிவிதப்பரிச்சேதமின்றென்கிற தெவ்வண்ணமென்னில்:—

மேற்சொல்லப்பட்ட இலக்ஷணந் தேகதருமமாதலாலும் தேகவிலக்ஷணமான ஆன்மா எல்லாத் தேசத்தினுமிருக்கின்றமையால் தேசத்தினற் பரிச்சின்னத்துவமில்லை. அனதியாதலாற் பூதகாலத்திலும் நித்தியராயிருத்தலாற் பௌஷிய காலத்திலும் தேகவிலக்ஷணமாயிருத்தலால் வர்த்தமான காலத்திலும் ஆன்மா பரிபூரணமாயிருத்தலால் கால பரிச்சேதமில்லை. சர்வாத்மகமாயிருத்தலால் வஸ்து பரிச்சேதமில்லை. இங்ஙனங் கூறிய திரிவிதப்பரிச்சேத சூன்னியமாயிருப்பதனல் பரிபூரணமெனப்படும்.

III. இந்த—இங்ஙனங்கூறிய அசிபதத்திற்கு வாச்சியலட்சியமாவதியாதென்னில் :—

சத்துரூபசத்தி, சித்துரூபசத்தி, ஆனந்தரூபசத்தி
யென்கிற சரீரத்திரயமும் சர்வவியாபகம், சர்வப்பிராகா
சம், சர்வானந்தம் என்கிற அவஸ்தாத்திரயமும் பரிபூர
ணன், தேஜோமயன், பரமானந்தன் என்கின்ற அபி
மானத்திரயமுமாகிய ஒன்பதும் இவைகளுடன் கூடிய
பரப்பிரஹ்மமொன்றும் இங்ஙனங்கூறிய பத்தும் வாச்
சியார்த்தம் இதற்கதிஷ்டான சைதன்னியமாயிருக்
கின்ற சர்வ சாட்சியே இலட்சியார்த்தம்,

அகண்டம் — அகண்டமென்றது — உலகர் நிர்ணயமும்
உலோகாயுதனிட நிர்ணயமும் அருகர் புத்தராகமங்
களாற் கண்டிக்கப்படும். இவைகளும் தேவகந்தர்வ
ராகமங்களாற் கண்டிக்கப்படும். இந்தச் சித்தாந்தங்
களெல்லாம் பிரஹ்மா ஆகமங்களாற்கண்டிக்கப்படும்.
இவைகளும் விஷ்ணுவாகமங்களாற் கண்டிக்கப்படும்.
இவைகளும் உருத்திராகமங்களாற் கண்டிக்கப்படும்.
இந்த வைதிகவாகமங்களெல்லாம் அஷ்டாதசபுரா
ணங்களாற் கண்டிக்கப்படும், அவையும் பாரதத்தால்
கண்டிக்கப்படும். இவையும் நீதிசாரத்தாற் கண்டிக்
கப்படும், இவையும் வேதத்திற்சொன்ன கன்மகாண்
டத்தாற் கண்டிக்கப்படும். இவையும் உபாசன
காண்டத்தாற் கண்டிக்கப்படும். இவைகளெல்லாம்
உபநிடதத்தாற் கண்டிக்கப்படும்.



இந்த உபநிடதங்களினால் நிர்ணயஞ் செய்கின்ற சச்சிதானந்த சொரூபமாகிய நம்மை வேறொன்றினாலும் கண்டிக்கப்படாமையாலும் அப்படி கண்டிக்கவேண்டுமானாலும், உபநிடதத்தினாலும் நிச்சயித்த பிரமாணமின்மையாலும், பிரமாணங்களுக்கெல்லாம் உபநிடதமே கொடுமுடியாக விளங்குகையினாலும், அந்த வுபநிடதத்தினால் நிர்ணயிக்கப்பட்ட நம்மை **அகண்டர்** எனப்படும்.

**பரிபூரணம்**—பரிபூரண ரென்றது, கடத்தைத் தண்ணீராற் பூரித்தாற்போல, பிராணமய கோசத்தாற் பூரிக்கப்பட்டிருக்கின்ற அன்னமயகோசம், மனோமயகோசத்தாற் பூரிக்கப்பட்டிருக்கிற பிராணமயகோசம், விஞ்ஞானமயகோசத்தாற் பூரிக்கப்பட்டிருக்கிற மனோமயகோசம், ஆனந்தமயகோசத்தாற் பூரிக்கப்பட்டிருக்கிற விஞ்ஞானமயகோசம், சிதாபாசனாற் பூரிக்கப்பட்டிருக்கிற இந்தப் பஞ்சகோசங்கள், இந்தப் பஞ்சகோசங்களினாற் பூரிக்கப்பட்டிருக்கிற பஞ்சபூதங்கள், இந்தப் பஞ்சபூதங்களினாற் பூரிக்கப்பட்டிருக்கிற இந்தப் பிரபஞ்சங்கள், இந்தப் பிரபஞ்சத்திலும் எங்கும் நிறைந்திருக்கிற

மாயா விசிட்டரும் நம்மாற் பூரிக்கப்பட்டு, நம்மிலும் வேறு பரிபூரணமின்மையால் நம்மைப் பரிபூரணர் எனப்படும்.

**சத்து**—சத்தென்றது, பழுதையினிடத்திற் பாம்பு ஆரோபமாய் உண்டாவதற்கு முன்னும், உண்டாகி யழிந்தபின்னும், விளங்குகிற காலத்தினும், அதற்கா தாரமாய் திரிகாலத்தினுங் கெடாமலிருக்கின்ற பழுதை யைப்போல், பரமான்மாவாகிய தன்னிடத்திற் சக சிருஷ்டி ஆரோபமாயுண்டாவதற்கு முன்னும், உண்டாகி யழிந்தபின்னும், உண்டாகி விளங்குகிற காலத்தினும், அவைகளுக்கு ஆதாரமாய் அவைகளைப்போற் றேன்றி, திரிகாலத்தினுங் கெடாமலிருக்கின்றதால் நம்மைச் **சத்து** என்பதாம்.

**சித்து**:— சித்தென்பது, சூரியனுனவன் தீபாதி சாத னுந்திரங்களை யபேக்ஷியாமல், தானும் பிரகாசமாயிருந் துகொண்டு, தன்னையடுத்த கடபடாதிகளையும் விளக்கி விக்கின்றதுபோல, தானும் சூரியாதி யஷ்டப் பிரகாசங் களாகிய சாதனுந்தரங்களை யபேக்ஷியாமல், சுயம்பிர



காசமாக விருந்துகொண்டு, தன்னையடுத்த அவஸ்தாத் திரய பிரபஞ்சங்களையும் அறிகின்றதனுல் நம்மைச் **சித்து** என்பதாம்.

**ஆனந்தம்**:—ஆனந்தமென்றது, தானும் சுகரூபமா யிருந்துகொண்டு, தன்னையடுத்தவர்களுக்குஞ் சுகத்தை செய்விக்கின்ற அமிர்தத்தைப்போல, தானும் நிரதிசயா னந்தமாக விருந்துகொண்டு, தன்னையடுத்த விருத்திக ளுக்கும் சுகத்தைச் செய்விக்கின்றதனுல் நம்மை **ஆனந் தம்** என்பதாம்,

**பிரமத்தினிடத்திலே**—இங்ஙனங்கூறிய பிரமத்தினிட மாய்; இதனைப் பிரமமென்றது, காலத்திரயத்தினு மாகாயம்போல, ஒருபடித்தா யெங்குநிறைந்திருக்கின்ற நாம், நித்தியசுத்தாதிலக்ஷணங்களுடனேகூடினபடியால் நம்மைப் **பிரமம்** என்பதாம்.

**சுத்தியில்**—திரிகோண நீலபுரட்டாயுள்ள கிளிஞ்சிலில்;

**ரஜதம்போல**—வெள்ளி தோன்றினதற்கொப்பாய்;

**மூல**—காரணமான

**பிரகிருதியென்னும்**—உற்பத்திக்குப் பிரதானமென்னும்;

**ஒரு சக்தியுண்டு**—ஒப்பற்ற ஒரு சக்தியுளது, இதனை மூலமென்றது, விருக்ஷோற்பத்திக்கு வித்து காரணமாதல் போல், பிரபஞ்சோற்பத்திக்கு இந்தப் பிரதானமே காரணமாயிருத்தலால் மூலமென்றது. இஃதைப் பிரகிருதி யென்றது, ஒரு அஞ்ஞானத்தையே பிரகிருதி யென்றும், மாயையென்றும், அவித்தையென்றும், தமசென்றும்; அநேகவிதமாய்க் கூறப்படும்

**அந்த மூல பிரகிருதியும்**—அங்ஙனங் கூறிய காரணமான பிரதானமானதும்;

**விகிர்தகுணமாகிய முக்குணத்தோடு**—வேறுபாடாகிய திரிகுணங்களோடு;

**கூடியிருக்கும்**—பொருந்தியிருக்கும். அஃதினுருவம் எப்படி யென்னில் :— வெள்ளை நூலும் சிகப்பு நூலும் கறுப்பு நூலும் ஒன்ருய் முறுக்கினல் எப்படி யிருக்



குமோ, அப்படிப்போலுள்ள இந்தப் பிரகிருதியில், அநேகங்கோடி சீவராசிகள் தங்களுடைய கருமமும் வாசனைகளுமாகிய பலத்துடனே கூடிப் பொருந்தியிருப்பார்கள், இதற்குத் திருஷ்டாந்தமெப்படியெனில்:- மெழுகுருண்டையில் நவலோக ரவைகளெப்படி லயித்திருக்குமோ அப்படிப்போல் இந்தப்பிரகிருதியி லீனமாயிருக்கிருர்கள் இதனை அவ்வியத்தமென்றும் சாமான்னியாவஸ்தையென்றும், மகாசுழுத்தியவஸ்தை யென்றும், பிரளயாவஸ்தையென்றும் கூறப்படும், இதற்குத் திருஷ்டாந்தம்:— பூமிக்குளிருக்கின்ற வித்தில் அங்குரமுண்டாதற்கு ஓர் பரிபக்குவகாலம் வந்ததுபோல, அந்த மகாசுழுத்தி யவஸ்தை யென்னும் பிரகிருதியிலடங்கியிருக்கின்ற ஜீவகோடிகளுடைய பரிபக்குவ காலமறிந்து, ஈஸ்வர கடாக்ஷ விக்ஷண்ணியம் பட்டதே காலதத்துவமென்றுங் கூறப்படும், அப்பூமிக்குள்ளிருக்கின்ற வித்துக்கு, மழைபெய்தூறியபின் முளையாமலும் முன்போற் கெட்டியாயிராமலும், உப்பி நடுவாயிருத்தல் போல், முன்போற் பிரகிருதியுமாகாமல், பின் வரப்போகிற அகங்காரத்துவமுமாகாமல், நடுவா யிருத்தலினல் இதனை **மகதத்துவம்** எனப்படும்.

**அந்த பிரகிருதியின்**—அங்ஙனங்கூறிய பிரதானத்தினது,

**சத்துவகுணத்தை**—சாத்விக குணத்தை,

**மாயையென்றும்**—அநிர்வாச்சியமெனவும்,

**சர்வஞ்ஞ வுபாதியென்றும்** — சர்வஞ்ஞத்துவாதி ஷட்குண வைஸ்வரிய சம்பன்னனாகிய ஈஸ்வரனுக்கு இந்த மாயை உபாதியாயிருத்தலால் சர்வஞ்ஞ வுபாதியெனவும்,

**ஈஸ்வர காரண சரீரமென்றும்**—ஈஸ்வரனுடைய தூல சூட்சும சரீர மிரண்டிற்கும் மாயை காரணமாயிருத்தலால், இதற்கு ஈஸ்வர காரண சரீரமென்றும்,

**சொல்லப்படும்**—பிரதிபாதிக்கப்படும். அந்தப் பிரகிருதியின் சத்துவகுண மெப்படி மாயையாயிற்றெனின், அந்தச் சத்துவகுணத்திற் சிற்சாயை தங்கினதால் மாயையாயிற்று. இதனை மாயையென்று கூறியதென்னையெனின், சர்வாந்திரியாமியாகிய ஈஸ்வரனுக்கு தத்துவக்ஞானம் விளங்குவதற்கு ஏதுவாயும், நிர்மல வுபாதியாயும், இந்திரஜாலம்போல் காலத்திரயத்தினுமில்லாத சுத்த மித்தையாயிருப்பதினாலும், "யாமா சாமா" இதன் வியாக்கியானம் :— யா—யாதொருத்தியானவள்; மா—இல்லையோ; சா—அவளானவள்; மா—மாயையென்றும் சுருதிகளிற் கூறியிருப்பதாலும் மாயை யென்பதாம். சர்வஞ்ஞத்து வாதி சட்குணமாவன:— சர்வக்ஞத்துவம், சர்வேஸ்வரத்துவம், சர்வாந்திரியாமித்துவம். சர்வகாரணத்துவம், சர்வ நியந்தரத்துவம், சர்வ சத்தித்துவம் என்று அறுவகைகளாம். இவற்றிற்சர்வஞ்ஞத்துவமாவன-சகலஜீவர்களுடையநல்வினை தீவினைகளை யறிந்து, ஒருங்கே போக மளித்தலால் சர்வஞ்ஞத்துவமெனப்படும். சர்வேஸ்வரத்துவமாவன— எல்லாரையும் சிருஷ்டித்துத் தன்னைச் சிருஷ்டிக்க ஒருத்தரு மில்லாமையாலும், தான் சிருஷ்டித்த பதார்த்தத்தை யொருவராலும் மாறுபடுத்தக் கூடாமையாலும், அஷ்டைஸ்வரிய சம்பன்னராயிருக்கின்ற படியினாலும், சர்வேஸ்வரத்துவமெனப்படும்.



அஷ்டைஸ்வரியமாவன:- அணிமாமுதலிய அஷ்டமா சித்திகளே அஷ்டைஸ்வரியமாம். அவையாவன:- அணிமா, மகிமா, கரிமா, இலகிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம் வசித்தவம், என்பனவாம்.

இவைகளின் அர்த்தம் :- **அணிமா** என்பது ஆன்மா போலாதலாம். **மகிமா** என்பது மகத்துவமாதலாம். **கரிமா** என்பது தன்னுடற் கண்டிப்பின்றாய், கண்டிப்

புள்ளவற்றை யுருவ வல்லவனாதலாம். இலகிமா என்பது இலகுவத்துவமாதலாம். பிராத்தி யென்பது வேண்டுவனவடைதலாம் பிராகாமியம் என்பது நிறையுளனாதலாம். ஈசத்துவம் என்பது ஆட்சியுளனாதலாம். வசித்துவம் என்பது எல்லாந் தன்வயமாக்க வல்லனாதல் என்பதாம். சர்வாந்திரியாமித்துவமாவன:- சகல ஜீவர்களுடைய புத்திக்குள்ளுந் தெரியாமலிருந்து, நல்வினை தீவினைப்பிரகாரம் ஆட்டிவிக்கின்றதினால் சர்வாந்திரியாமித்துவமெனப்படும். சர்வகாரணத்துவமாவன:- சிருஷ்டியாதி பஞ்சகிருத்தியங்களுக்குங் காரணமாயிருக்கின்றதுவே சர்வ காரணத்துவம் எனப்படும்

சர்வ நியந்தரத்துவமாவன:- சமுத்திரங் கரைகடவாமலும்,சூரியாதிகள்நியமந்தவறாமலுமிருக்கும்படி நியமஞ்செய்வதுவே சர்வநியந்தரத்துவம் எனப்படும். சர்வ சத்தித்துவமாவன:-சர்வ சத்திமானாதலால் சர்வசத்தித்துவம் எனப்படும். இஃதே சட்குணமென்பனவாம்.

ஈஸ்வர காரண சரீரமென்றது, சித்திரப் படத்தைச் சுருட்டி விரித்தாலெப்படியோ,அப்படிப்போல் ஈஸ்வரனுடைய விராட்டு,இரண்ணியகற்பமாகிய இரண்டு சரீரங்களையும் அடக்கி விரித்தற்கேதுவாக விருத்தலால் ஈஸ்வர காரண சரீரம் என்பதாம்.



**இந்த மாயையினிடத்திலே**—இங்ஙனங்கூறிய மாயா சத்தியினிடத்திலே

**நிர்மலசல**—தெளிவாயும் சுத்தமாயு மிருக்கின்ற தண்ணீரில்,

**பிரதிபிம்பம்போல** — சூரியனானவன் பிரதி பலனமானால், அவனது சாயையானது எப்படிக் கீழும் மேலுந் தெரியும்படி தோன்றுமோ அப்படிப்போல,

**பிரமம் சுலட்சணமாக**-முற்கூறிய பிரமம்சொச்சமாக,

**பிரதிபிம்பிக்கும்**—பிரதிபலனமாகும்.

**இந்தப் பிரதிபிம்ப சைதன்னியத்தை** — இப்படிப் பிரதிபலனமான சிற்சாயையை,

**சர்வஞ்ஞனை**—சர்வத்தையும் அறிகின்றவனை,

**ஈஸ்வரனென்று**—பரனென்று

**சொல்லப்படும்**—கூறப்படும். இவரைச் சர்வஞ்ஞரென்றது, தன்னையுந் தனக்கு அதிஷ்டானத்தையும் தனக்கு பாதியா யிருக்கின்ற சரீரத்திரயங்களாகிய சர்வ சராசரப் பிரபஞ்சங்களையும் அறிந்து அவைகளை யானென

தென்னு மபிமானமின்றி யியற்கை ஞானியாயும், மாயா விநோதராயுமிருத்தலால் சர்வஞ்ஞனென்பதாம். ஈஸ்வரன் என்றது எண்குணமுடையவனுதலென்பதாம். அவையாவன.— அனந்த ஞானம், அனந்த தரிசனம், அனந்தவீரியம். அனந்தசுகம், நாமமின்மை, கோத்திர மின்மை. ஆயுளின்மை. இடையூறின்மை என்பன வாம்.

**இந்த சத்துவகுண**—இங்ஙனங்கூறிய சாத்விககுண,

**மாயையினிடத்திலே**—வித்தையினிடத்திலே

**சத்துவத்தில் சத்துவம்**—சாத்விககுணத்தில் சாத்விக மும்,

**சத்துவத்தில் ரஜஸு**—சாத்விககுணத்தில் ராஜஸும்,

**சத்துவத்தில் தமசு**—சாத்விககுணத்தில் தாமசமும்,

**என மூன்று குணங்களுண்டு** — என்கின்ற திரிகுணங் களுளவாம்.

**இவைகளில்**—முற்கூறிய திரிகுணங்களில்,

**சத்துவத்தில்**—சாத்விககுண மாயையிடத்தில்,



**சத்துவம்**—சாத்விககுணம்,

**பிரதானமாகும்போது**—அதிகரிக்குங்காலையில்,

**அதில்**—அந்தச் சத்துவகுண மாயையினிடத்தில்,

**பிரதிபிம்பித்த ஈஸ்வரன்** – பிரதிபலனமான–சிவனுக்கு தமனியத்தானை தரித்தவராயும், சர்வாபரணராயும், புரி நூலழகராயும், நவரத்ன மணிமகுட கனக குண்டல கேயூரராயும், கடக கங்கண கௌஸ்துவாபரணராயும், நீலமேக சாமள ஸ்வரூபராயும், பசும்பொற்பீதாம்பர தாரியாயும், பைந்துழாய் மௌலியாயும், பஞ்சாயுத பாணியாயும், பதுமைபா கராயும், கருடாரூடராயும் வைகுந்த பதியாயுமிருந்து,

**சகத்தை**—பிர்மாண்ட பிண்டங்களாகிய சர்வ சரா சரப் பிரபஞ்சங்களையும்,

**ரக்ஷிக்கையினுல்**—ஜீவர்களுடைய நல்வினை தீவினை களை யறிந்து, இதாகித மென்னுந் திதித் தொழிலைச் செய்கின்றதனுல்,

**விஷ்ணுவென்றும்**—திருமால் எனவும்;

**சத்துவத்தில்**— சாத்விககுண மாயையினிடத்தில்,

ரஜஸ-ு பிரதானமாகும்போது—ரஜோகுணம். அதிகரிக்குங் காலையில்

அதில்—அந்தச் சத்துவகுண மாயையினிடத்தில்,

பிரதிபிம்பித்த ஈஸ்வரன்-பிரதிபலனமான, சிவனுக்கு தவளக் கலிங்கந்தரித்தவராயும், தமனிய வண்ணராயும், சிகையெக்யோபவீத ராயும், மணிமகுட கனககுண்டல கேயூரராயும், கடககங்கண மணிந்தவராயும் சுவேத பீதாம்பரதாரியாயும், சுருதிவாக்கியராயும், பரசாயுதராயும், தண்டு கமண்டல பாணியாயும், சரஸ்வதி சமேதராயும், அன்னரூடராயும், பிரம லோகாதி பதியாயும், பத்மாசனராயு மிருந்து,

சகத்தை—பிரமாண்ட பிண்டங்களாகிய சர்வசராசரப் பிரபஞ்சங்களையும்,

சிருஷ்டிக்கையினுல்—ஜீவர்களுடைய சஞ்சித கர்மமறிந்து உற்பத்தி செய்கின்றதினுல்,

பிரமனென்றும்—விரிஞ்சனெனவும்;

சத்துவத்தில் தமசு — சாத்விககுண மாயையினிடத்தில், தமோகுணம்



பிரதானமாகும்போது—அதிகரிக்குங் காலையில்,

அதில்—அந்தச் சத்துவகுண மாயையினிடத்தில்

பிரதிபிம்பித்த—பிரதிபலனமான

ஈஸ்வரன்—சிவனுக்கு—சார்த்தூல சரும மணிந்தவராயும், தந்தியுரிப்போர்வையராயும், சந்திரசூடராயும், சர்ப்பாபரணராயும், செஞ்சடாமகுட சிரோரத்தின பன்னக குண்டலகேயூரராயும், பொன்னிதழிசேர் புயத்தராயும், புயங்க கங்கணராயும், புரிநூலழகராயும், சிலம்பணி தாளராயும், திரிபுராந்தகராயும், திரிநேத்திரதாரியாயும், திரிபுண்டர வழகராயும் மாணிக்கமணி வண்ணராயும், மலைமகள் பாகராயும், பஞ்சாயுத பாணியாயும், இடபாரூடராயும், கைலாய பதியாயு மிருந்து,

சகத்தை—பிர்மாண்ட பிண்டங்களாகிய சர்வ சராசர பிரபஞ்சங்களையும்,

உபசம்மாரம் பண்ணுகையினுல்—ஜீவர்களுடைய பிராரத்துவ மொழியுங்கால மறிந்து உபசங்காரம் பண்ணுகையினுல்,

உருத்திரனென்றும்—சங்கரனெனவும்,

சொல்லப்படுவன்—வசனிக்கப்படுவன்.

இப்படி—மேற்சொல்லிய வித்தியா தத்துவமுதலிதுகாறுங் கூறியவையே.

மூலப்பிரகிருதியின்—காரணமான பிரதானத்தினது

சத்துவகுண கற்பனை சொல்லப்பட்டது—சாத்விககுண அததியாசங் கூறப்பட்டது.

இனி மூலப்பிரகிருதியின் — மேல் காரணமான பிரதானத்தினது.

ரஜோகுணம்—இராஜஸ குணம்.

அநேக ரூபமாய்ப் பிரிந்து — நாநாவித வடிவமாய் வேறுபாடாகி

அவித்தைகளென்றும் — அஞ்ஞானங்களெனவும்,

ஜீவகாரணசரீரங்களென்றும் — சிதாபாசர்களுக்கு இந்த அவித்தை அநாதியான தேகங்களெனவும்,

ஒன்றற்கொன்று—ஒருகுணத்திற்கொரு குணம்



தாரதம்மியமாக — உயர்வு, தாழ்வு உடையவைகளாக,

சொல்லப்படும்—கூறப்படும். இந்தப் பிரகிருதியின் ரஜோகுண மெப்படி யவித்தையாயிற்றெனில்? அந்த ரஜோகுணத்திற் சிற்சாயை தங்கினதால் அவித்தையாயிற்று. இதனை யவித்தையென்று கூறியது என்னையெனில்? சிதாபாசர்களுக்குத் தத்துவஞானத்தைக் கெடுப்பதற்கு ஏதுவாயும், மலின வுபாதியாயும், அறியாமையாயும், காலத்திரயத்திலு மில்லாதசுத்த மித்தையாயும், இருப்பதால் அவித்தைகளெனப்படும், சீவகாரண சரீரங்க ளென்றது, படத்தைச் சுருட்டி விரித்தாலெப்படியோ, அப்படிப்போல் சிதாபாசர்களுடைய தூலசூட்சுமமாகிய இரண்டு சரீரங்களையும் அடக்கி, விரித்தற்கு ஏதுவாக விருத்தலால், ஜீவகாரண சரீரங்களெனப்படும்.

இந்த அவித்தைகளிடத்திலேயும்– இங்ஙனங்கூறிய அஞ்ஞானங்களினிடத்தும்

மலினசல—சேற்றினுற் குழம்பின தண்ணீரில்

பிரதிபிம்பம்போல — சூரியனுனவன் பிரதி பலன மானு லவனது சாயையானது, அந்தச் சலத்தி லெப்படி விளக்கமாய்த் தோன்றுதோ அப்படிப்போல,

பிரமசைதன்னியம்—பிரமஹ்ஞானம்

பிரதிபிம்பிக்கும்—பிரதிபலனமாகும்.

இந்த பிரதிபிம்பசை தன்னியங்களை — இங்ஙனங் கூறிய ஞானப்பிரதிபலன்களை

கிஞ்சிக்ஞரென்றும் — அற்ப வறிவினை புடையவ ரென்றும்,

சீவசிதாபாசரென்றும் — சித்துத் தன்மை யின்றி ஆபாசத் தன்மை யுள்ளவர்களான ஜீவர்களென்றும்,

பிராக்ஞரென்றும் — பிரஞ்ஞை யுடையவரென்றும்,

சொல்லப்படும்—கூறப்படும். இவர்களைக்கிஞ்சிக்ஞ ரென்றது, முன்பின் ஒன்று மறியாமல், தேகாதிகளை யானென்றும், சம்சாராதிகளில் எனதென்கின்ற அபி மானுகாரனுய்த்துக்க ஜீவனம்பண்ணிக் கொண்டிருப்பதி னுல் கிஞ்சிக்ஞ ரெனப்படும். சிதாபாச ரென்றது, குழம்பின சலத்தில் ஆதித்தன்போலப் பிரதி பிம்பித்தும்



அவற்றில் ஆதித்த னில்லாதது போல, சித்துப்போற் றேன்றியும் சித்து லக்ஷண மில்லாதபடியினுல், சிதாபாச ரெனப்படும். சீவரென்றது, சாக்கிரமுதல் மோக்ஷப ரியந்தம் ஜீவித்துக்கொண்டும், துக்க ஜீவனம் பண்ணிக் கொண்டிருப்பதினுல் ஜீவரெனப்படும். பிராக்ஞரென்றது சுவப்பிரகாச ஸ்வரூபராக விருக்கின்ற படியினுலும், அந்தக்கரண வியாபார மின்றிச் சுழுத்தி யவஸ்தையை யறிந்து கொண்டிருக்கின்ற படியினுலும், மிகுந்த அறிவுடையவ ராதலாலும் பிராக்ஞரென்றது.

இந்த அவித்தைகளிடத்திலேயும்—இங்ஙனங்கூறிய அஞ்ஞானங்களினிடமாய்,

ரஜஸில் சத்துவம் — ரஜோகுணத்தில் சாத்விக குணமும்

ரஜஸில் ரஜஸு—ரஜோ குணத்தில், ரஜோகுணமும்,

ரஜஸில் தமசு—ரஜோ குணத்தில் தமோ குணமும்

என மூன்று குணங்களுண்டு—என்று சொல்லிய திரி குணங்களுளவாம்.

இரஜஸில் சத்துவம்—முற்கூறிய ரஜோ குணவித் தையில் சாத்விக குணம்

பிரதானமாகும்போது — அதிகரிக்குங் காலையில்,

அதில் பிரதிபிம்பித்த — அந்தரஜோகுண வவித்தையில், பிரதி பலனமான

சிதாபாசன்-சீவர்கள் தத்துவக்ஞானசத்தியக்ஞான

நிஷ்டனுவன் — அநுசந்தான முடையவர்களாவார்கள் இவர்களைத் தத்துவக்ஞான நிஷ்டரென்றது, முப்பத்தைந்து தத்துவங்களும் ஓரவஸ்தையிற் கண்டது ஓரவஸ்தையில் நசித்தலினுல், துவிதமென்றுகண்டு, முப்பத்தாருந் தத்துவமாகிய பரதத்துவமே தானென்று, அனன்னியமாய் அநுபவித்து நிற்றலினுலும், துவித விசிட்டாத்துவித ஞானமின்றி அப்பிரதிபந்தாபரோக்ஷ சாக்ஷாத்காரமாயும், ஜீவேஸ்வர ஜகத்து மித்தையென்றும், சின்மாத்திரமே யுண்மையென்றும் அதுவே தானென்றும், அறிந்திருக்கின்றவர்களே தத்துவக்ஞான நிஷ்டரெனப்படும். அன்றியும் உண்மை ஞானத்தில் மனமடங்கினவரெனவு நாமமாம்.

ரஜஸில்—முற்கூறிய ரஜோகுண வவித்தையில்

ரஜஸ—ரஜோகுணம்

பிரதானமாகும்போது—அதிகரிக்குங் காலையில்,



அதில்—அந்த ரஜோகுண வவித்தையில்

பிரதிபிம்பித்த—பிரதிபலனமான

சிதாபாசன்—ஜீவர்கள்

காமக்குரோதபரனுய் — காமக் குரோதாதிகளில் மிக்கவர்களாய்

கர்மநிஷ்டனுவன்—கர்மானுஷ்டானமுடையவர்களாவார்கள். இவற்றிற் காமக்குரோதாதியாவன:—காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாச்சர்யம் முதலியவாம். கர்மாநுஷ்டானமாவன:— நித்தியம், நைமித்தியம், காமியம், நிஷேதம், பிராயச்சித்தம் என ஐந்துவித கர்மங்களாம். இவைகளில், நித்தியகர்மமாவன:— ஸ்நானபானம், சந்தியாவந்தனம், ஜெபம், ஓமம், தேவதற்பணம், வைஸ்வதேவம், பசுபந்தனம் முதலியவைகளாம். நைமித்திய கர்மமாவன: — சங்கராந்தி, பர்வம், அர்த்தோதயம், மகோதயம் முதலிய புண்ணிய தினங்களில், நீராடல் முதலியவாம். காமிய கர்மமாவன:—பிர்மம், தெய்வம், பூதம், பிதுர்மானுடம் முதலிய ஐந்துவித யாகங்களைச் செய்தலாம். அஃதெவ்வண்ண மெனில்:— வேதமோதல் பிர்மயாகம்; ஓமம்

வளர்த்தலே தெய்வயாகம்; பலியீதல் பூதயாகம்; தர்ப் பண முடித்தல் பிதுர்யாகம்; இரப்போருக்குணவு முதலிய ஈதலே மானுடயாகமுமாம். இவைகளுடன் சோமவார விரதாதிகளைச் செய்தலெனப்படும்.

நிஷேதகர்மமாவன :— பிறனில் விழையாமை, கள்ளாமை, கொல்லாமை, கள்ளுண்ணுமை, பொய்யாமை முதலிய நியமம் பூண்டிருத்தலாம். பிராயச்சித்த கர்மமாவன :— சாந்திராயணம், கிரிச்சரம், சலபக்ஷணம், வாயுபக்ஷணம் தீர்த்த யாத்திரை முதலிய கர்மங்களைச் செய்தலாம். இந்தக்கர்மங்களினுற் பயன் யாதெனில் :-

தேகமிருக்குமட்டு நித்திய நைமித்திய கர்மங்களைச் செய்துவந்தால் பிராரத்துவம் போகுமெனவும், காமிய கர்மத்தைச் செய்துவந்தால் சுவர்க்கபோக முண்டாகு மெனவும், நிஷேத பிராயச்சித்த கர்மங்களைப் பண்ணி வந்தால்சஞ்சித மெடுபடுமெனவும், அதனுல் முத்திவரு மெனவும்கர்ம காண்டத்திற் பிரதிபாதிக்கப்படுகின் றன வெனச்சில நூலாசிரியர்கள் கூறுவார்கள். அது முத்தி யன்று அது முத்தியன்ருயின் இந்த ஐந்துவித கர்மங் களுக்கும் பிரயோசனம் யாதெனில், காமிய கர்மத்தினுல் ஞானம் வரமாட்டாது. சுவர்க்கலோக பிராப்தி யடைதலும், தேவத்துவமும், மேல் கீழ் போகிறதும், வருகிறதும்,



ஹானி விருத்திகளும். லாபா லாபங்களும், ஜனன மரணங்களும் வரும் நிஷேதகர்மமும் பிராயச்சித்த கர்ம மும், புருஷனுக்குக் கர்மத்தி லதிகாரத்தை யுண்டுபண் ணிப் பிரத்தியபாயத்தை பிராயச்சித்தகர்மம் போக்கா நிற்கும் ஆதலால், இந்தத் திரிவிதகர்மமும் ஞானசாதன மன்று. முற்கூறிய நித்திய நைமித்திய கர்மமிரண்டுந் திரிவிதமாகவிருக்கும். அஃதெப்படியென்னில், சத்து வகர்மம், ரஜோகர்மம், தமோகர்மம் எனத்திரிவிதமாம். அவற்றுள் ராஜத தாமதகர்ம மிரண்டும் பவ மரண துக்கத்தை விர்த்தியாக்கும் ஆதலால், அவைகளாலும் ஞானம் வராது. சத்துவகர்ம மாத்திரமே சித்த சுத்தி யுண்டாக்குவதனுல் ஞான சாதனமாம். இப்படி சத்துவ கர்மத்தினுல் ஏகதேசமா யுண்டாகும் சித்த சுத்தியைக் குறித்துச் சிலர் ஞான பரம்பரை யென்று கூறுவார்கள். ஆயினும், இந்தச் சத்துவகர்மம் பண்ணுங்காலையில், ஈஸ்வரார்ப்பணமாகப் பண்ணினுல் நிஷ்காமம் :— இந் நிஷ்காம புண்ணியத்து வாரா சித்தசுத்திவரும். இச்சித்தசுத்திதுவாரா சற்குரு லாபமுண்டாம். இச்சற்குரு லாபத்துவாரா சிரவண முண்டாம். சிரவணத்துவாராமனன முண்டாம். இம் மனனத்துவாரா நிதித்தியாசன முண்டாம். இந்நிதித்தி

யாசனத்துவாரா சமாதிஞான முண்டாம். இச்சமாதி ஞானத் துவாரா சாக்ஷாத்கார மோக்ஷமடைவார்கள். அன்றியுங் கன்மங்களிற் புத்தியழுந்தினவர்களெனவுமாம்.

இரஜஸில்—முற்கூறிய ரஜோகுண வவித்தையில்

தமசு பிரதானமாகும்போது — தமோகுணம் அதிகரிக்குங்காலையில்

அதில்—அந்த ரஜோகுண வவித்தையில்

பிரதிபிம்பித்த—பிரதிபலனமான

சிதாபாசன்—ஜீவன்

சோம்பல் — தனக்குரிய சுதர்மத்திலும் சத்திய புத்தி யில்லா நெடியசோபமும்.

நித்திரை—தனது சித்தத்தை வசஞ்செய்யும் வனிதாதியை மறக்கச் செய்யும் பெரிய துயிலும்,

மயக்கம் — இகபரங்களின்ன தென்று சிந்திக்க வறியாத பித்தர்போலும் அதிகவுன்மத்தமும்,

ஆகிய இவைகளை—ஆகின்ற இவைகளை



அடைவன்—பொருந்துவன். இவைகளில் சுதர்மம் யாதெனில், — தனக்குரிய குலதர்மமும், பசிதாக நிமித்தம்அன்னபானுதி கிராகியமும், மலமூத்திரவிசர்ச்சனமும் பண்ணுகின்றதாம்.

இப்படி—மேற்சொல்லிய அவித்தையாதத்துவமுதலிதுகாறுங் கூறிய இவ்விதம்,

மூலப்பிரகிருதியின் — காரணமானப் பிரதானத்தினது

இரஜோ குணம் கற்பனை — இராஜத குணத்தின் அத்தியாசம்; கற்பனை யென்பது திரிகாலத்தினு மில்லாததைக் கற்பிக்கின்றது. இங்ஙனங்கூறிய மாயையவித்தையே ஜீவேஸ்வரர்களுக்குக் காரண சரீரமெனவும், ஆனந்தமய கோசமெனவும், சுழுத்தியவஸ்தையெனவும் பெயராம். இதனை யபிமானிக்கின்ற ஜீவஈசர்களுக்குப் பிராக்ஞ அந்தரி யாமி யெனவும் கூறப்படும். முற்கூறிய வவித்தையிற் பிரதிபிம்பித்த ஜீவர்களுக்குப் போகசாதன முண்டாகு நிமித்தம், உபயகாரணராயிருக்கின்ற ஈஸ்வர வீக்ஷண்ணியத்தினுல் தநுகரணுதிகளுண்டாகும் பொருட்டு,

சொல்லப்பட்டது—கூறப்பட்டது.

இனி மூலப்பிரகிருதியின் — மேல் காரணமான முக்கியத்தினது

தமோகுணத்திற்கு—தாமதகுண பிரகிருதிக்கு

ஆவரணம் விக்ஷேபம்—மறைப்பு தோற்றம்

என இரண்டு சக்திகளுண்டு — என்கின்ற உபய சத்திகளுளவாம்.

இவ்விரண்டில்—இந்த வுபய சத்திகளில்

ஆவரண சத்தியானது — மறைப்பென்னுஞ் சத்தியானது

தத்துவ ஞானியையும் ஈஸ்வரனையும் — மெய்ஞ் ஞானியையும், பரனையும்

தவிர—ஒழிய

மற்றைச் சீவருக்கெல்லாம் — ஏனைய சிதாபாசருக்குள்ள,

சரீரத்திரயம்—ஸ்தூல சூட்சும காரணமென்கின்ற சரீர மூன்றையும்,

சிதாபாசன்—இந்தத் தேக மூன்றையு நானென்றபிமானஞ் செய்கின்ற ஜீவனையும்,



சாட்சி சைதன்னியம்—இங்ஙனங்கூறிய தத்துவங்களையெல்லாம் பகுத்தறிகின்ற சாக்ஷிஞானமும்,

என்னுமிவைகளின்—என்று கூறிய இத்தத்துவங்களுக்குள்,

ஒன்றற்கொன்றுள்ள — ஒரு தத்துவ மிகுந்தபடியொரு தத்துவ மிராத

பேதம் தெரிய வொட்டாமல் — வேறுபாடுகளை அறியக் கூடாமல்,

மறைக்கும் — திரைக்குள்ளிருப்பவரைத் திரையானது எப்படி யின்ன, ரின்ன ரென்கிற நாம ரூப பேதந் தெரியவொட்டாமல் மூடிக்கொள்ளுமோ அப்படி மூடிக் கொண்டிருக்கும். இந்த ஆவரண சத்தியானது தத்துவ ஞானியையும், ஈஸ்வரனையுந்தவிர, ஏனைய சீவர்களை மறைக்குங் காரண மென்னையெனில்:—ஞானசாரியருபதேச வாக்கியத்தாலும், விசாரக்ஞான பலத்தினாலும், அஞ்ஞானம் ஆவரணம் நிவர்த்தியாய் நித்தியாபரோக்ஷ அகண்டாதீத வேகரஸ ஸ்வயம்பிரகாச ஸ்வரூபசாக்ஷாத் காரமாக விருத்தலால், மெய்ஞ்ஞானியையும். ஊர்ண நாபியைப்போல் சக சிருஷ்டிக்கு நிமித்தோபாதான காரணராயும், மாயா ரகிதராயும், இயற்கைஞானியாயு மிருத்தலால், ஈஸ்வரனையு மூடாமல், மாயா சகிதரா யிருக்கின்ற மற்றைய ஜீவர்களுடைய ஞானவிழியினால்

தரிசனமாகாமல், குருடாகும்படி மூடிக்கொள்ளு மென்றறிக.

இதனுல்—இந்த ஆவரண சத்தியினுல்,

மறைபட்ட ஜீவர்-மூடப்பட்டிருக்கின்ற சிதாபாசர்

இருபத்தொன்பது தத்துவங்களேயும் — தத்துவங்கள் இருபத்தொன்பதையும்,

ஒருமைப் பாடாக நானென்று — ஒன்ருக ஆன்மாவென்று

அபிமானிப்பர் — அபிமானஞ்செய்குவர். இவைகளே யெப்படி நானென்றபி மானஞ் செய்குவ ரெனில் ;— நான் பருத்தே னிளேத்தேனென்று சட்கோச தத்துவமாகிய தூல சரீரத்தையும். நான் வசனுதி போக்குவரத்துக்கிரியை செய்தே னென்று வாக்காதி கன்மேந்திரிய பஞ்சகத்தையும், நான் கண்டேன் கேட்டேனென்று சுரோத்ராதி ஞானேந்திரிய பஞ்சகத்தையும். நான் பசி தாக முடையவனென்று பிராணுதி பஞ்சகத்தையும், நான் சங்கற்பித்தேன் நிச்சயித்தேனென்று அந்தக்கரண பஞ்சகத்தையும், நானறிந்தே னறியேனென்று ஜீவ னவித்தையையும், இவைகளுக்கு விலக்ஷணமாகவும் அசங்க கூடஸ்தராகவும், இருக்கின்ற ஆத்மஸ்வரூபமாகிய தன்னே, தானல்லாதவை களாயிருக்கின்ற இந்த



இருபத்தெட்டு தத்துவங்களுடனும் ஒன்ருகக் கூட்டி, எல்லாவற்றையும் ஒன்ருக நானென் றபிமானஞ் செய்குவரென் றறிக.

இந்த அபிமானத்தை—இங்ஙனங்கூறிய பிரகாரம் அபிமானஞ் செய்வதை

அகங்காரக் கிரந்தியென்றும்—அகம்பாவத்தி லழுந்திய தெனவும்,

சம்சாரபந்த மென்றும் — குடும்ப பாரமென்னும் பாசத்திஞற் கட்டுப்படலெனவும்,

சொல்லப்படும்—கூறப்படும். சம்சாரபந்தமாவன, சாதி வருணம் ஆச்சிரமம், அதனதன் தன்மாதன்மம், அதனதன் பலமான சுவர்க்கநரகம், அதன் சேடமான பவமரணுதிகளே சம்சாரபந்த மெனப்படும்.இவைகளெப்படி பந்தமாமெனில்:—திருடன் அந்நிய பதார்த்தத்தைக் கவர்ந்து கட்டுப்பட்டுத் துன்புறுதல் போல ஜீவன் தனக்குரிய பிர்ஹ்மானந்தத்தை விட்டு, உரித்தல்லாத விடயானந்தத்தைப் புசித்து, இங்ஙனங்கூறிய சாதி முதலியவைகளால் கட்டுப்பட்டு, சுக துக்க மடைதலே பந்தமெனப்படும்.

சற்குரு கடாக்ஷத்திஞலே—ஞானசாரியரது கருணேயினுலே

இந்த ஆவரண நீங்கி—இங்ஙனங்கூறிய மறைப்பு ஒழிந்து

இருபத்தொன்பது தத்துவங்களின் — தத்துவங்களிருபத்தொன்பதின்

ஒன்றற்கொன்றுள்ள--ஒரு தத்துவமிருந்தபடி ஒரு தத்துவ மிராத

பேதம் தெரிகின்றதே — வேறுபாடுகளை அறிகின்றதே

முத்தி — மோக்ஷமாம். சற்குருவானவர் மாயை யுற்பத்தி மாயை நாசம், அவித்தை யுற்பத்தி அவித்தை நாசம், அஞ்ஞானத்தை யறிந்தகற்றி யிருத்தல், ஞானத்தை யறிந்தடைந்திருத்தல், இந்த ஆறு லக்ஷண முடையவரே சற்குரு வெனப்படும். அன்றியுங் குரு வென்றது:-கு என்னும் அஞ்ஞானவிருளை, ரு-வென்னும் பிரகாசத்தினுல் கெடுக்கப்பட்டதனுல் குரு வென்றது. இம்மை மறுமையிற் சுக துக்கங்களைக் கொடுக்கின்ற வசிய முதலிய அஷ்ட கருமங்களைப் போதிக்கின்ற நிசிதாசாரியர் முதலிய ஆசிரிய பேத மிருப்பதால் ஞானுசாரிய ரென்றது.

வசிய முதலியவாவன :- வசியம், மோகனம், ஸ்தம்பனம், ஆகருஷணம், உச்சாடனம், வித்துவே ஷணம்,



பேதனம், மாரணம் முதலியவாம். அன்றியும் உத்தம குருவெனவுமாம். இந்த இருபத்தொன்பது தத்துவங்களையும் எப்படி தானன்றென்று அறிகிறதெனில்?- திரையை நீக்கினவுடன் திரைக்குள்ளிருப்பவரை யின்னுரின்னு ரென்று பகுத்தறிகிறதுபோல, ஞானுசாரிய ரூபதேச வாக்கியத்தினுல் ஆவரண சத்தியினுலுண்டான மறைப்பு நீங்கினவுடன், இந்த இருபத்தெட்டு தத்துவங்களுக்கும் விலக்ஷணமாகவும், அசங்ககூடஸ்தராகவும், நிசசொரூபமாகவும் இருக்கின்ற ஆத்ம சொருபமாகிய தன்னைப் பிரத்தியக்ஷமாக வறிந்து, தனக்கு அன்னியமாக விருக்கின்ற இந்த இருபத்தெட்டுந் தத்துவங்களையும். 'என் காணி என் வீடு' என்று ஒரு புருடனுக்கு எப்படி புறம்பாகக் காணப்படுகிறதோ அப்படியே என் தூல சரீரம் பருத்தது, இளைத்தது என்றும், என் வாக்காதி கன்மேந்திரியங்கள் வசனுதி கிரியையைச் செய்கிறதென்றும்,என் சுரோத்திராதி ஞானேந்திரியங்கள் சத்தாதியைக்கேட்டல் முதலியனசெய்கிறதென்றும் என் பிராணுதி பஞ்சவாயுக்கள் பசிதாக முதலியதை யுடையதென்றும், என் மனுதி யந்தக்கரணங்கள் சங்கற்ப விகற்பமுடைய தென்றும், என் ஜீவனவித்தை அறிவறியாமை யுடையதென்றும், தனக்குப் புறம்பாகக் கண்டு, அந்த இருபத்தெட்டு தத்துவங்களுந் தானன்றென்றும், அவைகளின் தாதாத்மிய அத்தியாச வேறுபாடுகளை யுத்திப்பிரமாணுனு பவங்களினுல், தீர

விசாரித்தறிகின்றதே தானன்றென்றறிகிறது. அன்றியும் இந்த இருபத்தொன்பது தத்துவங்களின் பேதந் தெரிகின்றதே முத்தியென்று பாட மோதுவாருமுளர்.

இப்படி—இந்தப் பிரகாரம்

ஆவரணசத்தியின் — மறைப்பென்னுஞ்சத்தியினது

காரியம் சொல்லப்பட்டது—தொழில் கூறப்பட்டது

இனி விக்ஷேபசத்தியினின்றும் — இதற்கு மேல் தோற்றமென்னுஞ் சத்தியினிடமாய்

சப்த தன்மாத்திரையான ஆகாசம் தோற்றிற்று— ஒலியின் அம்சமான வெளியுண்டாயிற்று.

ஆகாசத்தினின்றும் பரிச தன்மாத்திரையான வாயு தோன்றிற்று—அந்த வெளியினிடமாய் ஊறினம்சமான வளியுண்டானது.

வாயுவினின்றும் ரூபதன்மாத்திரையான அக்கினி தோன்றிற்று—அந்த வளியினிடமாய் ஒளியினம்சமான அனலுண்டானது.

அக்கினியினின்றும் ரச தன்மாத்திரையான அப்பு தோன்றிற்று — அந்த அனலினிடமாய் சுவையினம்சமான புனலுண்டானது.



அப்புவினின்றும்— அந்தப் புனலினிடமாய்

கந்த தன்மாத்திரையான—நாற்றத்தினம் சமான

பிருதிவி தோன்றிற்று—மிருத்திகை யுண்டானது.

இந்த சூட்சும பஞ்சபூதத்திற்கு—இங்ஙனங் கூறிய நொய்மையான ஐம்பூதத்திற்கு

காரணமாயிருக்கின்ற—மூலமாக இரா நின்ற

விக்ஷேப சத்தியினிடத்திலே — தோற்றம் என்னும் சத்தியினிடமாய்

தமசில் சத்துவம் — தமோ குணத்தில் சாத்வீக குணமும்,

தமசில் ரஜஸு — தமோ குணத்தில் இராஜத குணமும்,

தமசில் தமசு—தமோ குணத்தில் தாமச குணமும்,

என்னும் இவை அற்பங்கருவாக இருந்தபடியினல்— என்கின்ற இவைகள் சூட்சுமமாக அடங்கியிருந்த தன்மையினல்

அதன் காரியமாகிய — அந்த விக்ஷேப சத்தியினுடைய தொழிலாகிய

இந்தத் தன்மாத்திரைகளான பஞ்சபூதங்களும்—இந்தத் தன்னம்சங்களான சூட்சும ஐம்பூதங்களும்,

மூக்குணங்களுடனே பிறந்தன — திரி குணங்களுடனே தோன்றின.

இந்த பஞ்சபூதங்கட்கு—இங்ஙனங் கூறிய சூட்சும ஐம்பூதங்களுக்கு

தன்மாத் திரைகளென்றும் — தன்னம்சங்களெனவும்,

அபஞ்சிகிருத பூதங்களென்றும்-பஞ்கீகரணமாகாத பூதங்களெனவும்,

சூட்சும பூதங்களென்றும்—நொய்மையான பூதங்களெனவும்,

முக்குண பூதங்களென்றும் — திரிகுண பூதங்களெனவும்,

சாஸ்திரங்களில் நாமஞ்சொல்லப்படும்—சாஸ்திரங்களிற் பெயர் கூறப்படும்.

இந்தச் சூட்சும பூதங்களினின்றும் — இங்ஙனங் கூறிய நொய்மையான பூதங்களிலிருந்தும்,



சூட்சும சரீரங்களும்—நேர்மையான தேகங்களும்,

ஸ்தூல பூதங்களும்-பருமையான பஞ்சபூதங்களும்,

தோன்றும்—உண்டாகும்

அ:தெங்ஙனமெனில் — அவைகளுண்டாகுவ தெவ்வண்ணமென்ருல்,

ஆகாச முதலான பஞ்ச பூதங்களின் சத்துவாம்சத்திலே—ககன முதலிய சூட்சும ஐம்பூதங்களினுடைய சாத்விக குணும்சத்திலே

பூதத்திற் கொவ்வொரு மாத்திரை — ஒவ்வொரு பூதங்களினெவ்வொரு அம்சம்.

எடுத்து ஒன்ருகக்கூட்டி—எடுத்து ஒன்ருகச்சேர்த்து

வைத்தது அந்தக்கரணம்—வைத்தது அகக்கரணம்

இந்த அந்தக்கரணத்தில்—இங்ஙனங் கூறிய அகக்கரணத்தில்

ஆகாசத்தினம்சம்—வியோமத்தினம்சம்,

கூடினதற்கடையாளம்—புணர்ந்ததற்கிலக்கணம்

இந்த அந்தக் கரணமும்—இங்ஙனங்கூறிய அகக் கரணமானதிருக்கும் ஸ்தானம் யாதென்னில், சிரசினுச் சியை யாசிரயித்துக்கொண்டு இருக்கும். இந்த அந்தக் கரணமானது,

ஆகாசத்தைப் போல — சதுர்வித பூதங்களுக்கு மிடங்கொடுத்திருக்கின்ற விடத்துக்கொப்பாய்,

சகலமான கேள்விக்கும்—ஒலிகளனைத்திற்கும்

இடங்கொடுத்து தரிக்கின்றது—அக மீந்து தங்கு கின்றது

இப்படித் தரிக்கின்ற—இவ்வண்ணந் தங்குகின்ற

விருத்திக்கு உள்ளமென்று பெயர்—விவகாரத்திற்கு தேஜஸு என்று பெயர்.

இந்த அந்தக்கரணத்தில் — இங்ஙனங் கூறிய அகக்கரணத்தில்,

வாயுவினம்சம் கூடினதற்கு அடையாளம்—சதாகதி யினம்சம் சேர்ந்ததற்கு வியஞ்சனம்

இந்த அந்தக்கரணமும் — இங்ஙனங் கூறிய அகக் கரணமானதிருக்கும் ஸ்தானம் யாதெனில் :—கண்டஸ் தானத்தை யாசிரயித்துக்கொண்டிருக்கும். அதற்கதிஷ்



டான தேவதை யாதெனில் :—சந்திரன் அவ்வதிஷ்டான தேவதையினுற் பிரேரிக்கப்பட்ட அந்தக்கரணமானது, நாநாவாய்த் தோற்றப்பட்ட கற்பித விஷயங்களைச் சத்தியமாகச் சங்கற்பித்து, அவைகளிற் காமக்குரோ தாதிகளை யடைந்து சமுசய சாஞ்சல்யத்துடன்,

வாயுவைப்போல — இடைவிடாது சலிக்கின்ற சமீரணனுக் கொப்பாய்,

அலைகின்றது—விஷயங்களிற் சுழன்று வருகின்றது

இப்படியலைகின்ற -- இவ்வண்ணம் வருகின்ற

விருத்திக்கு மனமென்று பெயர்—விவகாரத்திற்கு மானதமென்று நாமம்

இந்த அந்தக்கரணத்தில்—இங்ஙனமானதமென்று கூறிய அகக்கரணத்தில்,

அக்கினியினம்சம் கூடினதற் கடையாளம்—தேயுவி னம்சம் அடுத்ததற்கங்கம்

இந்த அந்தக் கரணமும்—இங்ஙனங்கூறிய அகக் கரணமானதிருக்கும் ஸ்தானம் யாதெனில், இருதய ஸ்தானத்தை யாசிரயித்துக் கொண்டிருக்கும். அதற் கதிஷ்டான தேவதை யாதெனில், சதுர்முகன். அவ்

வதிஷ்டான தேவதையினுற் பிரேரிக்கப்பட்ட அந்தக் கரணமானது, மனத்தினுற் சமுசய சாஞ்சல்யமுற்ற விஷய விவகாரங்களை யெல்லாம்,

அக்கினியைப்போல — இருட்டிலுள்ள பதார்த்தங் களை யி:தி:தென்று, தன்னுடைய பிரகாசத்தினுல் விளக்குவிக்கின்ற ஒளிக்கொப்பாய்,

ஈதின்னதென்று—இது நன்றென்றும், தீதென்றும், இ:து ஆம் என்றும், அன்றென்றும்,

விளக்குவிக்கின்றது — தனது நிச்சயித்தினுலறிவிக் கின்றது.

இப்படி விளக்குவிக்கின்ற—இவ்வண்ணம் அறிவிக் கின்ற

விருத்திக்கு புத்தியென்று பெயர்—விவகாரத்திற்கு மதியென்று நாமம்

இந்த அந்தக்கரணத்தில்—இங்ஙனம் புத்தியென்று கூறிய அகக்கரணத்தில்

அப்புவினம்சம் கூடினதற் கடையாளம்—
பயசினம்சம் கலந்ததற் கறிகுறி



இந்த அந்தக்கரணமும் — இங்ஙனங்கூறிய அகக் கரணமானதிருக்கும் ஸ்தானம் யாதெனில், நாபிப் பிரதேசத்தை யாசிரயித்துக்கொண்டிருக்கும். அதற்கு அதிஷ்டான தேவதை யாதென்னில் திருமால் அவ்வதிஷ் டான தேவதையினுல், பிரேரிக்கப்பட்ட அந்தக்கரணமா னது, புத்தியினுல் நிச்சயித்தறிந்தவிஷய விவகாரங்களை யெல்லாம், அவதானஞ் செய்து அடிக்கடி ஞாபகப் படுத்திக்கொண்டு

அப்புவைப்போல—தரிக்குமிட மறியாமல் அதிவேக மாகச் செல்லுகின்ற சம்பரத்துக் கொப்பாய்,

விடயங்களிற்பற்றி—எதிரிட்ட விடயங்களைப்பிடிக்க

இமுக்கின்றது—செல்லுகின்றது.

இப்படி யிமுக்கின்ற—இவ்வண்ணஞ் செல்லுகின்ற

விருத்திக்கு — விவகாரத்திற்கு

சித்தமென்றுபெயர் — சிந்தனையென்று நாமம்.

இந்த அந்தக்கரணத்தில் — இங்ஙனஞ் சிந்தனை யென்று கூறிய அகக்கரணத்தில்

பிருதுவியினம்சம் — மிருத்திகையினம்சம்

கூடினதற் கடையாளம்—சம்பந்தித்ததற்குச் சின்னம்

இந்த அந்தக்கரணமும் — இங்ஙனங்கூறிய அகக்கரணமானதிருக்கும் ஸ்தானம் யாதென்னில், சர்வாங்கமும் வியாபித்திருக்கும் அதற்கு அதிஷ்டான தேவதை யாதென்னில், உருத்திரன். அவ்வதிஷ்டான தேவதையினுற் பிரேரிக்கப்பட்ட அந்தக்கரணமானது, சித்தத்தினுற் சிந்திக்கப்பட்ட விஷய விவகாரங்களினுல் வரும் லாபாலாபங்களையும், சுகதுக்கங்களையும், மானுவமானங்களையும், ஜெயாபஜெயங்களையும், அறியாமல் அவைகளை யென்னதென் றும்,

பிருதுவியைப்போல — உரமாக விருக்கின்ற மண்ணுக் கொப்பாய்,

கடினமாக நின்று — கடுமையாக இருந்து

நானென்று அபிமானிக்கின்றது—சரீரத்திரயங்களை யானென்றுங் களிக்கின்றது.

இந்த அபிமான விருத்திக்கு—இப்படிக் களிக்கின்ற விவகாரத்திற்கு

அகங்காரமென்றுபெயர் — அகம்பாவம் என்று நாமம்.



இன்னும் ஆகாசமுதலான — இன்னும் வியோம முதலான

பஞ்சபூதங்களினுடைய — சூட்சும ஐம்பூ தங்களினுடைய

சத்துவாம்சத்திலே — சாத்வீககுணம்சத்திலே

பூதத்திற் கொவ்வொருமாத்திரை யெடுத்து — ஒவ்வொரு பூதங்களிலொவ்வொரு அம்சம் எடுத்து,

தனித்தனியே — வியஷ்டி வியஷ்டியாக

வைத்தது சுரோத்திராதி — வைத்தது சுரோத்திர முதலிய

ஞானேந்திரியமென்று சொல்லப்படும் — ஞானப் பொறிகள் என்று கூறப்படும். இங்ஙனங் கூறிய ஞானேந்திரிய பஞ்சகத்தில்,

இவைகளிற் சுரோத்திரம்—மேற்கூறிய இவைகளிற் சுரோத்திரேந்திரியமாவது யாதென்னில்,—சத்தமெல்லாம் எதனுல் கிரகிக்கப் படுகின்றதோ அதற்கு சுரோத்திரேந்திரிய மென்று பெயர். அதற்கு ஸ்தானம் யாதென்னில்.—கர்ண சட்குள்ளிய அவச்சின்ன நபோ தேசத்தை யாசிரயித்திருக்கும். அந்த நபோ தேசத்

தையே சுரோத்திரேந்திரிய மென்னலாமோவென்னில், சுழுத்தி, மூர்ச்சை, மரணசரீரங்களி லிருக்கிற நபோ தேசத்தினுல் சப்தங்களை யறியவேண்டும். அங்ஙனம் அறியாமையால், அந்தநபோதேசத்துக்கு அன்னியமாய், சத்தக்கிராகிய சத்திமத்தாய், சூட்சுமமாய், ஒருவஸ்து அந்த நபோதேசத்தை யாசிரயித்துக்கொண்டிருக்கும். அதற்கே சுரோத்திரேந்திரிய மென்று பெயர். அதற் கதிஷ்டான தேவதை யாதென்னில் திக்கு. அவ்வதிஷ் டான தேவதையினுற் பிரேரிக்கப்பட்ட சுரோத்திரேந் திரியம்.

ஆகாசத்தினம்ச மானபடியினுல் — விசும்பினம் சமாகிய தன்மையினுல்

ஆகாசத்தின் குணமான — அம்பரத்தின் விஷயமான

சத்தமாத்திரத்தையறியும் — லௌகீகத்தொனி. வைதிகத்தொனி, வர்ணத்தொனி, பிரதித்தொனி, என்கின்ற சதுர்விதபேத சத்தங்களையும், பஞ்சிகிருத பேதசத்த மிருப்பதையும் மட்டும் முணரும். இவைகளில் லௌகிகத் தொனியாவது யாதென்னில். — பிராகிருத ரூப மானபதினெண் பாஷைகளுமாம். அவைகளெத் தனைவிதமா யிருக்கு மென்னில், —அவைகள் அனந்தவித மாயிருக்கும், வைதீகத்தொனியாவது யாதென்னில்.—



அப்பிராகிருத ரூபமான வேதசாஸ்திரங்களனைத் துமாம். அவைகளெத்தனை விதமா யிருக்குமென்னில் அவைகளும் அனந்தவிதமாயிருக்கும். வர்ணத் தொனியாவது யாதென்னில். — சப்த சுரங்களையும் வர்ணமாக அமைத்துப் பாடுகின்றதும், சாஸ்திராப் பியாசம்பண்ணுகின்றதுமாம் அவைகளெத்தனைவிதமா யிருக்குமென்னில். — அவைகளும் அனந்தவிதமாம். பிரதித்தொனியாவது யாதென்னில், தோல்களினுல் விசித்துக் கட்டி யடிக்கின்றபேரி மிருதங்கம் முரசு முத லியவைகளாம். அவைகளெத்தனைவிதமென்னில், அவை களும் அனந்த விதமாம்

துவக்கு — தொக்கிந்திரியமாவது யாதென்னில், பரிசமெல்லாம் எதினுற் கிரகிக்கப்படுகின்றதோ அதற் குத் தொக்கிந்திரிய மென்று பெயர். அதற்கு ஸ்தானம் யாதெனில், தொக்கைச் சர்வத்திரா வியாபித்துக் கொண்டிருக்கும். அந்தத் தொக்கையே தொக்கிந்திரிய மென்னலாமோ வெனில், சுழுத்தி, மூர்ச்சை, மரண சரீரங்களி லிருக்கிற தொக்கினுற் பரிசத்தை யறிய வேண்டும் அங்ஙனம் அறியாமையினுல். அந்தத் தொக்குக் கன்னியமாய் ஸ்பரிசக் கிராகிய சத்திமத் தாய், சூட்சுமமாய் ஒரு வஸ்து, சிரசின் நடுவில் நபோ தேசத்திலிருந்து இரண்டு கவராய்த் தொக்கைப் பரிசித் துக்கொண்டிருக்கும், அதற்கே தொக்கிந்திரிய மென்று

பெயர். அதற்கு அதிஷ்டான தேவதை யாதென்னில் வாயு அவ்வதிஷ்டான தேவதையினால் பிரேரிக்கப்பட்ட தொக்கிந்திரியம்

வாயுவினம்சமானபடியினால் — அம்போதியினம் சமாகிய தன்மையினால்,

வாயுவின்குணமான — அனிலத்தின் விஷயமான

பரிசமாத்திரத்தையறியும் — சீதம், உஷ்ணம், சீதோஷ்ணம், மிருது, கடினம், என்கின்ற ஐந்துவித பரிசங்களையும், பஞ்சீகிருத பேதபரிச மிருப்பதையுமட்டு முணரும். அந்தப் பரிசங்களெத்தனை விதமாமென்னில், அவைகளொவ்வொன் றனந்த விதமாம்.

சட்சு—சட்சு விந்திரியமாவது யாதென்னில், ரூப மெல்லா மெதனாற் கிரகிக்கப்படுகிறதோ, அதற்குச் சட்சு விந்திரியமென்று பெயர். அதற்கு ஸ்தானம் யாதென்னில், கருவிழியை யாசிரயித்துக்கொண்டிருக்கும்.

அந்தக் கருவிழியையே சட்சு விந்திரிய மென்ன லாமேயென்னில், சுழுத்தி மூர்ச்சை மரண சரீரங்களி லிருக்கிற கருவிழியினால் ரூபங்களை யறியவேண்டும். அங்ஙனம் அறியாமையால், அந்தக் கருவிழிக் கந்நிய மாய், ரூபக்கிராகிய சத்திமத்தாய், சூட்சுமமாய், ஒரு



வஸ்து, சிரசின் நடுவில் நபோதேசத்திலிருந்து, இரண்டு கவராய், குவளை முன்னிலையில், அந்தக் கருவிழியை யாசிரயித்துக்கொண்டிருக்கும் அதற்கே சட்சு இந்திரிய மென்று பெயர். அதற்கு அதிஷ்டான தேவதை யினால் யாதென்னில் சூரியன் அவ்வதிஷ்டான தேவதை பிரேரிக்கப்பட்ட சட்சு இந்திரியம்,

அக்கினியினம்சமானபடியால்—சுடரினம் சமாகிய தன்மையினால்

அக்கினியின் குணமான—ஒளியின் விஷயமான

ரூபமாத்திரத்தையறியும் — வெள்ளை, சிவப்பு, பச்சை, மஞ்சள், கறுப்பு, ஊதா, மிசிரம் அகலம், நிகளம், உயர்வு, தாழ்வு என்கிற பதினொருவித ரூபங் களையும், பஞ்சீகிருத பேதரூபத்தையுமட்டுமுணரும், அந்த ரூப மெத்தனை வகைப்படு மென்னில் அவைக ளொவ்வொன்று மனந்தவிதமாம்.

சிங்நுவை—சிங்நுவை யிந்திரியமாவது யாதென் னில், ரசமெல்லா மெதனாற் கிரகிக்கப்படுகிறதோ அதற்குச் சிங்நுவை என்று பெயர். அதற்கு ஸ்தானம் யாதென்னில். — நுனிநாவை யாசிரயித்துக்கொண் டிருக்கும். அந்த நுனிநாவையே சிங்நுவை யிந்திரிய மென்னலாமோ வென்னில், சுழுத்திமூர்ச்சை மரண

சரீரங்களிலிருக்கிற நுனி நாவினுல் ரசங்களை யறிய வேண்டும். அங்ஙன மறியாமையால், அந்த நுனிநாவுக் கன்னியமாய், ரசக்கிராகிய சத்திமத்தாய், சூட்சும மாய், ஒருவஸ்து கபால நடுவில் நபோதேசத்திலிருந்து, இரண்டு கவராய்த்தந்ததா லோஷ்டத்தைப்பற்றி, அந்த நுனிநாவை யாசிரயித்துக் கொண்டிருக்கும். அதற்கே சிங்நுவை யிந்திரிய மென்று பெயர். இதற்கு அதிஷ்டான தேவதை யாதென்னில் வருணன். அவ்வதிஷ்டான தேவதையினுற் பிரேரிக்கப்பட்ட சிங்நுவை யிந்திரியம்,

அப்புவினம்சமானபடியினுல் — பானியத்தினம்ச மாகிய தன்மையினுல்,

அப்புவின்குணமான — உதகத்தின் விஷயமான

ரசமாத்திரத்தையறியும்—உப்பு, புளிப்பு, கார்ப்பு, கசப்பு, துவர்ப்பு, தித்திப்பு என்கின்ற சடுவித ரசங் களையும், பஞ்சீகிருத பேதரஸ மிருப்பதையுமட்டு முணரும். அந்த ரச மெத்தனை வகைப்படுமென்னில், அவைக ளோவ்வொன்று மனந்த விதமாம்.

கிராணம் — ஆக்கிராணேந்திரியமாவது யாதென் னில், கந்தமெல்லா மெதனுற் கிரகிக்கப்படுகின் றதோ, அதற்கு ஆக்கிராணேந்திரிய மென்று பெயர். அதற்கு



ஸ்தானம் யாதெனில், நுனிமூக்கை யாசிரயித்துக் கொண்டிருக்கும் அந்த நுனிமூக்கையே ஆக்கிராணேந் திரிய மென்னலாமோ வென்னில், சுழுத்தி மூர்ச்சை மரண சரீரங்களிலிருக்கிற நுனிமூக்கினுற் கந்தங்களை யறியவேண்டும் அங்ஙனம் அறியாமையால் அந்த நுனிமூக்குக் கன்னியமாய், கந்தக்கிராகிய சத்திமத்தாய் சூட்சுமமாய் ஒருவஸ்து கபால நடுவிலிருந்து, இரண்டு கவராய், மூக்குத்தண்டெலும்பைப்பற்றி, அந்த நுனி மூக்கை யாசிரயித்துக் கொண்டிருக்கும். அதற்கே ஆக் கிராணேந்திரிய மென்றுபெயர். அதற்கு அதிஷ்டான தேவதை யாதென்னில் அசுவினி அவ்வதிஷ்டானதேவ தையினுற் பிரேரிக்கப்பட்ட ஆக்கிராணேந்திரியம்,

பிரிதுவியினம்ச மானபடியினுல் — வசுதை யினம்ச மாகிய தன்மையினுல்,

பிருதுவியின் குணமான — அனந்தையின் விஷய மான

கந்தமாத்திரத்தை யறியும்—சுகந்தம், துர்க்கந்தம், மிசிரகந்தம், என்கின்ற கந்தத்திரயங்களையும், பஞ்சீ கிருதபேத கந்தமிருப்பதையுமட்டு முணரும். அந்தக் கந்த மெத்தனை வகைப்படு மென்னில், அவைக ளோவ் வொன்று மனந்த விதமாம். இந்த சுரோத்திராதி ஞானேந்திரிய பஞ்சகங்கள் சத்தாதி விஷய பஞ்சகங்

களை மாத்திரம் அறியு மென்று பகுத்துக் கூறிய தென்னையெனில். — இவைகள், தன் தன் அம்சமான விஷயங்களை மாத்திரம் அறியுமேயன்றி, ஓரிந்திரியம் மற்றோரிந்திரியங்களின் அம்சமான விஷயங்களை அறிய மாட்டா தென்பதை யுணர்த்தியது. இவைகளேன் அறியமாட்டாதென்னில் :—

இப்படி ஐந்தும் — இவ்வண்ணம் ஞானேந்திரிய பஞ்சகங்களும்,

ஒன்றோடொன்று—ஓரிந்திரியத்துடன் ஓரிந்திரியம்

கூடாதபடியினால் — சேராததன்மையால்

ஒன்று மற்றொன்றின் குணத்தை — ஓரிந்திரியம் மற்றோர் இந்திரியத்தின் விஷயத்தை

கிரகிக்க அறியாது—உணரமாட்டாது. இவைகளை அந்தக்கரணங்க ளறியுங் காரண மென்னையெனில்,

அந்தக்கரணத்தில் ஐந்து மாத்திரையும் — அந்தக் கரணத்திற் பஞ்ச தன்மாத்திரையும்

ஒன்றாய்க்கூடினது கொண்டு — சமஷ்டியாகச் சேர்ந்தது கொண்டு,



ஐந்து இந்திரியங்களினாலும் — பஞ்சேந்திரியங்களினாலும்

ஐந்து விடயங்களையும் அயுறிம் — பஞ்ச விஷயங்களையும் உணரும். இந்தக் கரணேந்திரியங்களுக்கு ஞானோற்பத்தி வந்த காரணம் என்னையெனில்

இந்தச் சத்துவகுணத்தில் உண்டான—இங்ஙனங் கூறிய சாத்விக குணத்தி லுற்பத்தியான

அந்தக்கரணம் ஐந்தும் — அந்தக்கரண பஞ்சகமும்

ஞானேந்திரியம் ஐந்தும் — ஞானேந்திரிய பஞ்சகமும்,

ஆக பத்தும்—ஆகின்ற பத்தும்

சத்துவாம்ச மானபடியால் — சாத்விக குணாம்சமாகிய தன்மையினால்

ஞான சாதன மாயின — அறிதற் கிடமாயின

இன்னும் ஐந்து பூதங்களினுடைய — இன்னும் சூட்சும பஞ்ச பூதங்களினுடைய

ரஜோம்சத்திலே — இராஜதகுணாம் சத்திலே

பூதத்திற்கோவ்வொரு மாத்திரையெடுத்து — ஒவ்வொரு பூதத்தில் ஒவ்வொரு மாத்திரை யெடுத்து

ஒன்ருகக் கூட்டிவைத்தது—சமஷ்டியாகச் சேர்த்து வைத்தது

வியாஞதி பஞ்ச வாயுக்கள் — வியானன் முதலிய ஐந்து வாயுக்கள்.

இவைகளில் வியானவாயு — இந்த வியாஞதி பஞ்ச வாயுக்களில், வியான வாயுவாவது யாதென்னில், சரீரத்தைப் பலப்பட நிறுத்தி, இந்திரியங்களுக்குப் பலனைக் கொடுத்துக் கொண்டிருக்கிற தெதுவோ, அதற்கு வியான வாயு வென்று பெயர். அதற்கு ஸ்தானம் யாதென்னில். சர்வசரீரம். அதற் கதிஷ்டான தேவதை யாதென்னில். விஸ்வயோனி. அவ்வதிஷ்டான தேவதையினுற் பிரேரிக்கப்பட்ட வியானவாயுவானது

ஆகாசத்தி னம்ச மானபடியினுல்—வானத்தி னம்சமாகிய தன்மையினுல்.

ஆகாசத்தைப்போல் — சதுர்வித பூதங்களிலும் வியாபித்திருக்கின்ற சேனுவுக் கொப்பாய்

சர்வாங்கமும்—சரீர முழுவதும்

வியாபித்திருக்கும்—சூழ்ந்து கொண்டிருக்கும்.



பிராணவாயு — பிராணவாயுவாவ தியாதென்னில், உசுவாச மெதனுற் பண்ணப்படுகிறதோ, அதற்குப் பிராணவாயு வென்று பெயர். அதற்கு ஸ்தானம் யாதென்னில் இருதயம் அதற்கு அதிர்ஷ்டான தேவதை யாதென்னில்விசிட்டன். அவ்வதிஷ்டான தேவதையினுற் பிரேரிக்கப்பட்ட பிராணவாயுவானது,

வாயுவின் அம்சம் ஆனபடியினுல் — உலவையினம்சமாகிய தன்மையினுல்

வாயுவைப்போல — ஒழியாமல் அலைகின்ற மாருதத்துக் கொப்பாய்,

இருதயத்திலிருந்து — இருதய ஸ்தானத்திலிருந்து பன்னிரண்டு கலையாய்

நாசிகாதிபரியந்தம் அலையும் — மூக்குவரையிலும் ஓடி பன்னிரண் டங்குலம் வெளியிற் பிரவேசித்து, நாலுகலை சூனியத்திற் கழிந்து, போகப் பாக்கி யெட்டு கலைகளும் திரும்பி நாசியின்வழியே உள்ளே செல்லுகிறதுமாய் உலாவும்.

அபானவாயு — அபானவாயுவாவ தியாதென்னில், நிசுவாசமௌதனுற்பண்ணப்படுகிறதோ, அதற்கு அபான வாயுவென்று பெயர். இதற்கு ஸ்தானம் யாதென்னில் குதம். அதற்கு அதிஷ்டான தேவதை யாதென்னில்

விசுவகர்த்தா, அவ்வதிஷ்டான தேவதையினுற் பிரேரிக்கப்பட்ட அபானவாயுவானது,

அக்கினியின் அம்சம் ஆனபடியினுல் — அழலின் அம்சமாகிய தன்மையினுல்

அக்கினியைப்போல — தன்னேயடுத்த பதர்த்தத்தைச் சுட்டுச் சாம்பலாக்குகின்ற சேர்ந்தார்க்கொல்லிக் கொப்பாய்

சாடராக்கினியாக — எல்லாவற்றையுஞ் சுட்டுத் தகிப்பதிற் பலமுள்ள அக்கினியானது, வாழைக் கட்டையைத் தகிக்கமாட்டாது. அதன் கனியையுஞ் சீர்ணிப்பிக்கின்ற ஊழித்தீயாய்

உஷ்ணித்துக்கொண்டு—வெப்பமுண்டாகப்பண்ணி

குதத்தைப்பற்றிநின்று — குதஸ்தானத்தைப்பற்றியிருந்து

உண்டஅன்னபானுதிகளே—புசித்த சதுர்வித வுண்டிகளின் அன்ன சாரங்களே

சிரணிப்பிக்கும்—பதனழிவு செய்யும்.

சமானவாயு — சமானவாயுவாவ தியாதெனில், உண்டல், குடித்தல், உறிஞ்சல், நக்கல் என்கின்ற



சதுர்வித வுண்டிகளேச் சாடராக்கினியோடுகூடி. உபசமனம்பண்ணி, சீரத்திற்கெது புஷ்டி செய்விக்கின்றது வோ, அதற்குச் சமானவாயு வென்று பெயர், அதற்கு ஸ்தானம் யாதென்னில் நாபி. அதற்கு அதிஷ்டான தேவதை யாதென்னில் சூயன். அவ்வதிஷ்டான தேவதையினுற் பிரேரிக்கப்பட்டிருக்கிற சமானவாயுவானது.

அப்புவின் அம்சம் ஆனபடியினுல்—அமுதத்தினம்சமாகிய தன்மையினுல்,

சீர நடுவான — தேக மத்தியான

நாபித் தானத்தின்று — உந்திஸ்தானத்திலிருந்து

உண்ட அன்ன ரசங்களே—புசித்த சதுர்வித வுண்டிகளின் அன்ன ரசங்களே

அப்புவைப்போல் இழுக்கும் — தன்னே யடுத்த திரண முதலியவைகளே, அதிவேகமாய் இழுத்துக்கொண்டு செல்லுகிற சலத்துக்கொப்பாய், எழுபத்தீராயிர நரம்புகளிலும் இழுத்துக்கொண்டு நடக்கும்

உதானவாயு—உதானவாயுவாவது யாதென்னில், சுழுத்திகாலத்திற் சகல இந்திரியங்களேயும் ஒடுக்கிக்கொண்டு, தனக்குக் காரணமான அஞ்ஞானத்தில், எது லயிக்கப்பண்ணுகிறதோ, சாக்கிராவஸ்தையில் அ

தந்த இந்திரியங்களை அந்தந்த விடத்தில் எது நிறுத்து கிறதோ, மரணகாலத்தில் சகல இந்திரியங்களையுங் கிரகித்துக்கொண்டு லோகாந்தரத்தில் எது போகிறதோ அதற்கு உதானவாயு என்று பெயர். அதற்கு ஸ்தானம் யாதென்னில்—கண்டம். அதற்கதிஷ்டான தேவதை யாதென்னில் பிர்மா. அவ்வதிஷ்டான தேவதையினுற் பிரேரிக்கப்பட்ட உதானவாயுவானது,

பிருதுவியின் அம்சம் ஆனபடியினுல் — பூமியின் அம்சமான தன்மையினுல்,

கண்டத்தைப்பற்றி — மிடரு ஸ்தானத்திருந்து, உண்டல், குடித்தல், உறிஞ்சல், நக்கல் என்கின்ற சதுர்வித வுண்டிகளைக் கடைந்து தள்ளிக்கொண்டு,

பிருதுவியைப்போல — கடினமாகவிருக்கின்ற மண்ணுக்கொப்பாய்,

கடினமாக நின்று—வலிமையாகத் தங்கி

உண்ட அன்ன பானுதிகளைக் கடையும் — புசித்த அன்ன பானுதிகளைத் தள்ளும்.

இந்தப் பஞ்சவாயுக்களையும் அல்லாமல்—இங்ஙனங் கூறிய வியானுதி வாயுக்களைந்தையுமன்றி



வாந்தி செய்விக்கின்றது— சத்தி செய்விக்கின்றது.

நாகன் என்றும்—நாக வாயு என்றும்,

இமைத்து விழிப்பிக்கின்றது — கொட்டி விழிக்கச் செய்விக்கின்றது.

கூர்மன் என்றும்—கூர்மவாயு வென்றும்,

குறுகுறுத்துத் தும்மச் செய்கின்றது — குறுகுறுப்புடன் தும்மலுண்டாகச் செய்விக்கின்றது.

கிரிகரன் என்றும்—கிரிகா வாயுவென்றும்,

கொட்டாவி கொள்ளச் செய்கின்றது—கொட்டாவி வரச் செய்விக்கின்றது.

தேவதத்தன் என்றும்—தேவதத்த வாயுவென்றும்,

வீங்கச் செய்கின்றது—உயிர் நீங்கி ஐந்து தினம் வரையிலும், நீங்காமல் இச்சரீரத்துக்குள்ளிருந்து, சரீரம் முழுவதையும் வீங்கச் செய்து, துர்க்கந்தமாக்கி, ஐந்தாம் நாளில் கபாலம் வெடித்து, சரீரத்தினின்றும் வெளியிற் செல்கின்றது.

தனஞ்சயன் என்றும்—தனஞ்சய வாயுவென்றும்,

வேறே ஐந்து வாயுக்கள் — வேருக நாகாதி பஞ்ச வாயுக்கள்.

உண்டென் றும்—உளதென் றும்.

சிலர் சொல்லுவார்—சில நூலாசிரியர்கள் புகலுவார்கள்.

இவ் வைந்தும்—இங்ஙனங் கூறிய நாகாதி பஞ்ச வாயுக்களும்,

பிராண னுடைய—பிராண பவன னுடைய

தொழிலானபடியால் வேறல்ல—விவகாரமா யிருப்பதனுல் வேறல்ல. அப்பிராணவாயுக்கு இந்நாகாதி வாயுக்கள் ஐந்தும் அந்நியமன் று.

இன்னும் ஆகாசம் முதலிய — இன்னும் விசும்பு முதலாக

பஞ்ச பூதங்களினுடைய — சூட்சும ஐம்பூதங்களினுடைய

ரஜோம்சத்திலே—ராஜத குணும்சத்திலே

பூதத்திற்கு ஒவ்வொரு மாத்திரை எடுத்து—பூதத்திற் கொவ்வோ ரம்சங்க ளெடுத்து,



தனித்தனியே வைத்தது — வியஷ்டி வியஷ்டியாக வைத்தது

வாக்கு ஆதி — வாக்கு முதலிய

கர்மேந்திரியம் என்று சொல்லப்படும் — தொழிற் கருவிக ளென் று கூறப்படும்.

இவைகளில் ஆகாசத்தினிடமாக — இவைகளில் வெளியி னிடமாக

வாக்கு — இந்த வாக்காதி கர்மேந்திரிய பஞ்சகத்தில், வாக்கிந்திரிய மாவ தியாதெனில், சத்தமெல்லாம் எதனு லுச்சரிக்கப் படுகின்றதோ அதற்கு வாக்கிந்திரிய மென் று பெயர். அதற்கு ஸ்தானம் யாதென்னில், நுனிநாதாலு மூல மேலுதடு கீழுதடு பல் கண்டம் இருதயம் பிரமரந்திர மென்கின்ற அஷ்ட தானங்களையும் ஆசிரயித்துக்கொண்டிருக்கும். அந்த அஷ்ட தானங்களையே வாக்கு இந்திரிய மென்னலாமோ வென்னில், சுழுத்தி மூர்ச்சை மரண சரீரங்களிலிருக்கிற அந்த அஷ்ட தானங்களினுல் சத்தங்க ளுச்சரிக்கப்பட வேண்டும். அங்ஙனம் உச்சரிக்கப்படாமையால், அந்த அஷ்டதானங்களுக் கந்நியமாய், சத்தம் உச்சரிக்கிற சக்திமத்தாய் சூட்சுமமாய், ஒருவஸ்து முகார விந்தத்திலிருந்து, அவ் வஷ்டதானங்களை யாசிரயித்துக்

கொண்டிருக்கும். அதற்கே வாக்கிந்திரியமென்றுபெயர். அதற்கதிஷ்டான தேவதை யாதென்னில் அக்கினி. அவ்வதிஷ்டான தேவதையினுல் பிரேரிக்கப்பட்ட வாக்கிந்திரியம்,

வசனிக்கும் — சத்தங்களை உச்சரித்துக்கொண்டிருக்கும்.

வாயிவுனிடமாக — வளியினிடமாக

பாணி—பாணிந்திரிய மாவ தியாதென்னில், கொடுக்கல் வாங்கல் முதலிய கிரியைகள் எதிறுற் செய்யப்படுகிறதோ, அதற்குப் பாணிந்திரிய மென்று பெயர், அதற்கு ஸ்தானம் யதென்னில், உள்ளங்கையை யாயிரத்துக்கொண்டிருக்கும். அந்த வுள்ளங்கையை பாணிந்திரிய மென்னலாமோ வென்னில். சுழுத்தி மூர்ச்சை மரண சரீரங்களிலிருக்கிற வுள்ளங்கையினுல், தானுதிகிரியைகளைப் பண்ண வேண்டும். அங்ஙனம் பண்ணுமையால், அந்த வுள்ளங்கைக் கந்நியமாய், தானுதி கிரியா சத்திமத்தாய், சூட்சுமமாய். ஒரு வஸ்து முகார விந்தத்திலிருந்து, உள்ளங்கையை யாசிரயித்துக் கொண்டு இருக்கும். அதற்கே பாணிந்திரிய மென்று பெயர், அதற்கதிஷ்டான தேவதை யாதென்னில் இந்திரன், அவ் வதிஷ்டான தேவதையினுற் பிரேரிக்கப்பட்ட பாணிந்திரியம்



இடுதல் ஏற்றல் செய்யும் — கொடுக்கல் வாங்கல் பண்ணும்.

அக்கினியினிடமாக — வன்னியினிடமாக

பாதம்—பாதேந்திரிய மாவ தியாதெனில், கமனுதிக் கிரியைகளை யெதனுற் செய்யப்படுகிறதோ, அதற்குப் பாதேந்திரிய மென்று பெயர். அதற்கு ஸ்தானம் யாதென்னில், உள்ளங் காலை யாசிரயித்துக்கொண்டிருக்கும். அந்த வுள்ளங்காலையே பாதேந்திரிய மென்னலாமோ வென்னில், சுழுத்தி மூர்ச்சை மரண சரீரங்களிலிருக்கிற உள்ளங்காலினுற் கமனுதி கிரியைகளைப் பண்ணவேண்டும், அங்ஙனம் பண்ணுமையால், அந்த வுள்ளங்காலுக் கந்நியமாய், கமனுதி கிர்யா சத்திமத்தாய், சூட்சுமமாய், ஒரு வஸ்து முகார விந்தத்திலிருந்து, இரண்டு கவராய் அந்த வுள்ளங்காலை யாசிரயித்துக் கொண்டிருக்கும். அதற்கே பாதேந்திரிய மென்று பெயர். அதற் கதிஷ்டான தேவதை யாதென்னில் உபேந்திரன். அவ்வதிஷ்டான தேவதையினுற் பிரேரிக்கப்பட்டபாதேந்திரியம்,

நடக்கும்—கமனுதி கிரியைகளைப் பண்ணும்,

அப்புவினிடமாக — சலத்தி னிடமாக

பாயுரு — பாயுரு விந்திரிய மாவ தியாதெனில், மலவிசர்சனுதி கிரியைகளை யெதனுற் செய்யப்படுகிற தோ, அதற்குப் பாயுரு விந்திரிய மென்று பெயர். அதற்கு ஸ்தானம் யாதென்னில் குதத்தை யாசி ரயித்துக்கொண்டிருக்கும். அந்தக் குதத்தையே பாயுரு விந்திரியமென்ன லாமோ வென்னில், சுழுத்தி மூர்ச்சை மரண சரீரங்களி லிருக்கிற குதத்தினுல் மலவிசர்ச்சனு திக் கிரியைகளைச் செய்யவேண்டும். அங்ஙனஞ் செய் யாமையால், அந்தக் குதத்திற் கந்நியமாய், மலவிசர்ச் சனுதி கிரியா சத்திமத்தாய், சூட்சுமமாய், ஒருவஸ்து முகாரவிந்தத்திலிருந்து குதத்தை யாசிரயித்துக்கொண் டிருக்கும், அதற்கே பாயுரு விந்திரிய மென்று பெயர். அதற்கதிஷ்டான தேவதை யாதென்னில், மிருத்தியு. அவ் வதிஷ்டான தேவதையினுற் பிரேரிக்கப்பட்ட பாயுரு விந்திரியம்

மலசலாதிகளை வெளியிலே தள்ளும் — அமேத்திய நீர் முதலியவைகளைப் புறம்பாகக்கழிக்கும்.

பிருதுவியினிடமாக—அனந்தையி னிடமாக

உபஸ்தம்—உபஸ்தேந்திரிய மாவ தியாதென்னில், சுக்கில சுரோணித மூத்திர விசர்ச்சனுதி கிரியைகளை யெதினுற் செய்யப்படுகின்றதோ, அதற்கு உபஸ்தேந் திரிய மென்று பெயர். அதற்கு ஸ்தானம் யாதென்



னில், யோனி யிலிங்கங்களை யாசிரயித்துக்கொண்டி ருக்கும் இந்த யோனி யிலிங்கங்களையே யுபஸ் தேந்திரிய மென்னலாமோ வென்னில் சுழுத்தி மூர்ச்சை மரண சரீரங்களி லிருக்கிற வுபஸ்தத்தினுல், சுக்கில சுரோணித விசர்ச்சனுதி கிரியைகளைப் பண்ண வேண்டும். அங்ஙனம் பண்ணுமையால், அந்த யோனி யிலிங்கங்களுக் கந்நியமாய், சுக்கில சுரோணிதமூத்திர விசர்ச்சனுதி கிரியா சத்திமத்தாய், சூட்சுமமாய், ஒரு வஸ்து முகாரவிந்தத்தி லிருந்து யோனி யிலிங்கங்களை யாசிரயித்துக்கொண்டிருக்கும். அதற்கே யுபஸ்தேந் திரிய மென்று பெயர், அதற் கதிஷ்டான தேவதை யாதென்னில் ப்ரஜாபதி, அவ் வதிஷ்டான தேவதை யினுற் பிரேரிக்கப்பட்ட வுபஸ்தேந்திரியம்,

சுகத்தைப்பண்ணும் — ஆனந்தாதி கிரியைகளைப் பண்ணும். இந்த வாக்காதி கன்மேந்திரியங்கள் ஒன் றின்ருெழிலை மற்ருென்று செய்யாத காரண மென்னை யெனில்,

இந்த ஐந்தும் தனித்தனியே — இந்த கன்மேந்திரிய மைந்தும், வியஷ்டி வியஷ்டியாய்

இருந்துகொண்டு — இருக்கின்ற விதத்தினுல்

மறுதொழில் செய்யமாட்டாது — மற்ருேரிந்திரியங்

களின் கிரியைகளைப் பண்ணமாட்டாது, வியானுதி வாயுக்களைந்தும், வாக்காதி கர்மேந்திரிய பஞ்சகத்துடன் கூடி, அவைகளின் தொழில்களைச் செய்விக்குங் காரணம் என்னையெனில்,

வியானுதி வாயுக்கள் — வியானன் முதலிய பஞ்ச வாயுக்கள்,

ஐந்துமாத்திரையையும்—பஞ்சதன் மாத்திரைகளும்

ஒன்ருய்க் கூடினதுகொண்டு — சமஷ்டியாகச் சேர்ந்திருக்கின்றபடியால்,

கர்மேந்திரியம் — தொழிற் கருவிகள்

ஐந்தின் வழியினுலும் — ஐந்தின் மார்க்கத்தினுலும்

ஐந்துதொழில்களையுஞ் செய்து முடிக்கும். — பஞ்சக் கிரியைகளையுஞ் செய்து முடிக்கும். இவைகளுக்குக் கிரியாவுற்பத்தி வந்தகாரண மென்னையெனில்,

இந்த வாயுக்கள் ஐந்தும் — இந்த வியானுதி பஞ்ச வாயுக்களும்,

கன்மேந்திரியங்கள் ஐந்தும் — கன்மேந்திரிய பஞ்சகமும்,



ஆகபத்தும் ரஜோம்ச மானபடியினுல் — ஆகின்ற பத்தும், இராஜதகுணம்சமான தன்மையினுல்,

கிரியாசாதனமாயின — தொழிற்கிடமாயின.

அந்தக்கரணம் ஐந்தும்—அகக்கரணம் ஐந்தும்

ஞானேந்திரியம் ஐந்தும்—ஞானேந்திரிய பஞ்சகமும்

வாயுக்கள் ஐந்தும் — வியானுதி வாயுக்கள் ஐந்தும்,

கன்மேந்திரியம் ஐந்தும் — வாக்காதி கன்மேந்திரியம் ஐந்தும்,

ஆக இருபது தத்துவமும் — ஆகிய இந்த இருபது தத்துவங்களும்,

சூட்சும சரீரம் என்று சொல்லப்படும் — இலிங்க சரீரமென்று கூறப்படும்.

இந்த சூட்சும சரீரத்தை — இங்ஙனங் கூறிய இலிங்க தேகத்தை

மாயாப் பிரதிபிம்பனு யிருக்கின்ற — மாயையிற் பிரதிபலன மானவனு யிருக்கின்ற

ஈஸ்வரன் — சிவன்,

அவித்தையாப் பிரதிபிம்ப ராகிய — அவித்தையிற் பிரதிபலன மானவர்களாகிய

ஜீவர்கள் — சிதாபாசர்கள்

அநேகர் ஆகையால் — பலரான படியினல்

ஒவ்வொருவருக்கும் — ஒவ்வொரு ஜீவருக்கும்

ஒவ்வொரு சரீரமாக — ஒவ்வொரு தேகமாக

சிருஷ்டித்து அளித்தான் — பிறப்பித்துக்கொடுத்தார். இந் நூலாசிரியர் கூறிய வண்ணமே, ஏனைய சுருதிகளிலும், சூட்சும சரீர தத்துவம் இருபது என்று கூறி யிருக்கின்றதோ வென்னில், வேறு விதமாகவும் கூறியிருக்கின்றன. அஃதெங்ஙன மென்னில், இந்த லிங்கதேகம் சோடசாத்மக மென்று ஒரு சுருதியிற் சொல்கின்றது. அந்தப் பக்ஷத்தில் அந்தகரணம் ஐந்தில் ஒன்று மாத்திரமேயாகும். பதினேழு தத்துவமென்று ஒரு சுருதியிற் கூறுகின்றது. அந்தப் பக்ஷத்தில் மனமும் சித்தமும் ஒன்றென்றும், புத்தியும் அகங்காரமும் ஒன்றென்றும் சொல்லப்படும். பத்தொன்பது தத்துவமென்று ஒரு சுருதியிற் சொல்கின்றது. அந்தக் கரணங்கள் நான்கையுஞ் சொல்வதாகும். இப்படி யெத்தனை விதமாகச் சொன்னலும் விரோத மில்லையென்றறிக.



இப்படி சூட்சுமசரீர கற்பனைசொல்லப்பட்டது — இவ்வண்ணம் லிங்கதேக அத்தியாசங் கூறப்பட்டது.

இனி, தூலபூத உற்பத்தி — மேல், பருமையான பூதங்கள் உண்டானதை

சொல்லுகின்ரேம் — கூறுகின்ரேம்.

அஃதெங்ஙன மெனில் — அஃது எப்படி யென்ருல்,

தமோம்சமாயிருக்கின்ற — தாமத குணம்சமாக இருக்கின்ற

ஐந்து பூதங்களையும் ஒவ்வொன்றை இரண்டிரண்டாக — சூட்சும பஞ்சபூதங்களையும் ஒவ்வொரு பூதத்தை இரண்டு இரண்டு பாகமாக,

பகுத்து — பிரித்து

முதற்பாதி ஐந்தையும்—முதற் பாகம் ஐந்தினையும்,

ஒவ்வொன்றை — ஒவ்வொரு பாகத்தை

நான்கு நான்காக — நாலு நாலு பாகமாய்

பகுத்து — பிரித்து

இரண்டாம் பாதிஐந்தில் — இரண்டாவது பாகம் ஐந்தில்

தன் அம்சத்துடனே கூட்டாமல் — தன் அம்சத்தை நீக்கி

மற்றைய நான்கு பூதங்களுடனும் — ஏனைய சதுர்வித பூதங்களுடன்,

அரைக்கால் அரைக்கால் மாத்திரையாகக் கொடுக்கின்றது — அரைக்கா லரைக்கா லம்சமாகக் கொடுக்கின்றது.

பஞ்சிகரணமென்று சொல்லப்படும் — பஞ்சீகரணமென்று கூறப்படும்

இப்படிப் பஞ்சிகரணம் பண்ணின — இவ்வண்ணம் பஞ்சிகிருதமாகிய,

ஸ்தூல பூதங்களிலே — ஸ்தூல பஞ்ச பூதங்களிலே

ஆகாசத்திலே — வியோமத்தி னிடத்திலே

பரிசு ரூப ரச கந்தம் — ஊறும், ஒளியும், சுவையும், நாற்றமும்,

ஆகிய நான்கு குணங்களும் — ஆகின்ற சதுர்வித



குணங்களும்,

வியாப்பிய மானபடியினுல்—அடங்கியிருப்பதாகிய தன்மையினுல்,

அதிருசியமாய்ப் போக — அறியப்படாததாக இருக்க

நிசகுணமாகிய — யதார்த்த குணமாக இருக்கின்ற

சப்தம் — பிரதித்தொனி ஒன்றும்

திருசியமாம் — அறியப்படுவதாம்.

வாயுவிலே—உலவையினிடத்திலே

ரூப ரஸ கந்தம் — ஒளியுஞ் சுவையும் நாற்றமும்

ஆகின்ற மூன்று குணங்களும் — ஆகின்ற திரிவித குணங்களும்,

வியாப்பிய மானபடியினுல்—அடங்கியிருப்பதாகிய தன்மையினுல்,

அதிருசிமாய்ப்போக—அறியப்படாததாக இருக்க

காரணகுண மாகிய சப்தமும் — நிமித்தகுணமாக

விருக்கிற சீறுசீறு என்று அடிக்கின்ற சப்தமும்,

நிச குணமாகிய — யதார்த்த குணமாக விருக்கின்ற

ஸ்பரிசமும் திரிசியமாம் — சீத வுஷ்ணமாக வருகின்ற ஸ்பரிசகுணமு மாகின்ற உபயகுணங்களும் அறியப்படுவதாம்.

அக்கினியிலே — தேயுவி னிடத்திலே

ரஸ கந்தம் — சுவையும் நாற்றமும்

ஆகிய இரண்டு குணங்களும் — ஆகின்ற உபய குணங்களும்,

வியாப்யமானபடியினுல் — அடங்கி யிருக்கின்ற தன்மையினுல்

அதிருசியமாய்ப் போக — அறியப் படாததாக இருக்க

காரண குணங்களாகிய — மூல குணங்களாக இருக்கின்ற

சப்த ஸ்பரிசமும் — பக பக வென்கிற சப்தமும், சுடுகிற ஸ்பரிசமுமாகிய இரண்டும்



நிசகுணமாகிய ரூபமும் — யதார்த்த குணமாக இருக்கின்ற பிரபை யென்கின்ற ஒளியுமாகிய திரிவித குணங்களும்

திரிசியமாம் — அறியப்படுவதாம்

அப்புவிலே — புனலினிடத்திலே

கந்தகுணம் வியாப்பிய மானபடியால் — நாற்றமாகிய குணமொன்று அடங்கிருப்பதாகிய தன்மையினுல்

அதிருசியமாய்ப்போக — அறியப்படாததாக இருக்க

காரணகுணங்களாகிய — ஹேது குணங்களாக விருக்கின்ற

சப்தஸ்பரிசரூபமும் — கள கள வென்கின்ற சப்தமும், குளிர்ந்த பரிசமும், சுக்கில ரூபமுமாகிய மூன்றும்

நிசகுணமாகிய ரஸமும் யதார்த்த குணமாக விருக்கின்ற மதுரரச மொன்றுமாகின்ற சதுர்வித குணங்களும்,

திரிசியமாம் — அறியப்படுவதாம்.

பிருதுவியிலே — வசுதையினிடத்திலே

காரண குணங்களாகிய — மூல குணங்களாக விருக்கின்ற

சப்த ஸ்பரிச ரூப ரஸமும் — கட கட வென்கின்ற சப்தமும், கடின ஸ்பரிசமும், பஞ்சவர்ண ரூபமும், அறுசுவை ரஸமுமாகிய நான்கும்.

நிசகுணமாகிய கந்தமும் — யதார்த்த குணமாக விருக்கின்ற சுககந்த, துர்க்கந்த, மிசிரகந்தமென்கின்ற திரிவித மாகிய கந்தமொன்று மாகின்ற ஐந்துவித குணங்களும்,

திருசியமாம் — அறியப்படுவதாம். இங்ஙனம் பஞ்சீகரணமான ஆகாயமுதல் பிருதுவி யீருயுள்ள பஞ்சபூதங்களுக்குள், காரண குணங்களும் நிசகுணங் களும் அறியப்படுவதாகத்தோன்றி நிற்க ஏனைய குணங் கள் அறியப் படமாலிருக்குங் காரண மென்னையோ வெனில், இப்பூதங்களுக்குள் ஆகாய முதற் பிருதுவி யீருய், ஒன்றற்கொன்று பத்துபங்கு வியாபகக்குறைவு பட்டிருப்பதினுல், அறியப்படாமலிருக்கின்றன வென வறிக.

இங்ஙனங் கூறிய பஞ்சீகிருத பஞ்சமகா பூதங்க



ளுக்கு, நாமருபாதிகள் எத்தனை வகைப்படுமென்னில், தசவிதமாம். அஃதெங்ஙன மெனில், — பிருதுவிக்கு நாமம் பிருதுவி. ரூபம் சதுர்க்கோணம். வர்ணம் சுவர் ணம். சுபாவம் கடினம். குணம் கந்தம். கிரியை சிரு ஷ்டி, முகம் சத்தியோசாதன், தேவதை பிரமா. சத்தி சரஸ்வதி. அக்ஷரம் — அகார முதலியவாம்

அப்புவிற்கு நாமம்அப்பு ரூபம் அர்த்த சந்திராகாரம். வர்ணம் சுவேதம். சுபாவம் ரஸம் குணம் சீதளம். கிரியை பானம். முகம் வாமதேவன். தேவதை விஷ்ணு. சத்தி லக்ஷ்மி. அக்ஷரம் உகார முதலியவாம். தேயுவிற்கு நாமம் அக்கினி. ரூபம் திரிகோணம், வர்ணம் சுரோணிதம். சுபாவம் உஷ்ணம். குணம் தேஜஸ், கிரியை சம் ஹாரம், முகம் அகோரன். தேவதை ருத்திரன். சத்தி சுவரகாசத்தி. அக்ஷரம் மகாரம் முதலியவாம். வாயு வுக்கு நாமம் வாயு. ரூபம் சட்கோணம். வர்ணம் தூமர வர்ணம் சுபாவம் சலனம் குணம் ஸ்பரிசம். கிரியை சஞ்சாரம். முகம் தற்புருஷன். தேவதை மகேசுவரன், சத்தி திரோபவி. அக்ஷரம் நாதமுதலியவாம். ஆகாயத் திற்கு நாமம் ஆகாயம், ரூபம் விருத்தாகாரம். வர்ணம் நீலவர்ணம். சுபாவம் வெளி, குணம் சப்தம். கிரியை அநுக்கிரம். முகம் ஈசானியன். தேவதை சதாசிவம். சத்தி பராசத்தி. அக்ஷரம் பிந்து முதலியவாம், இவை

களே ஐந்து பூதங்களுக்குமுள்ள நாமரூப முதலிய தசவிதமாம்.

முன் சூட்சும பூதங்களினின்று — முன் நேர்மையான ஐம்பூதங்களினின்றும்,

சூட்சும சரீரங்கள் — நுண்மையான தேகங்கள்

தோன்றினற் போல — உண்டான தற் கொப்பாய்,

பஞ்சீகரணம் பண்ணின — பஞ்சீகிருதம் செய்த

ஸ்தூல பூதங்களினின்றும் — பருமையான பஞ்சபூதங்களி லிருந்தும்,

ஆறுதத்துவமாய் — சட்கோச தத்துவமாய்

நால்கைப் பிறப்பாய் — சதுர்வித பிறப்பாய்

மூவகைச் சாதியாயிருக்கின்ற — திரிவித குலமாயிருக்கின்ற

ஸ்தூலசரீரங்கள் தோன்றின — பருமையான தேகங்களுண்டாயின. இதற்கு ஸ்தூலசரீரமென்று பெயர் யாதினுல் வந்ததெனில், சர்மாதி யாறுதத்துவமாய், சட்பாவ விகாரமாய், சட்கோச தத்துவமாய் கரசரணுதி அவயவாகாரமாய், காட்டகுட்டியம் போலச்



சடமாய் விட்டதா, மூத்திரபாத்திரமாய், நாலு முழமட்டாய், ஸ்தம்பம்போல் பிரத்தியக்ஷமாய்த் தோன்றுகின்றதனுல், ஸ்தூலசரீர மென்று பெயர் வந்தது. மத்திய சரீரத்திற்குச் சூட்சுமசரீரமென்று பெயர். எதனுல் வந்ததெனில், பூர்வ சரீரம்போல் தூலமாய்த் தோன்ருமல், நேர்மையாயிருப்பதனுல் சூட்சும சரீரமென்று பெயர் வந்தது. இதனை லிங்க சரீரமென்று கூறியதென்னையெனில், ஈனமான சப்தாதி விஷயங்களையறியப் பண்ணுகிறபடியினுலும், ஆத்மாவை லக்ஷணத்தினுலறியப் பண்ணுகிறபடியினுலும், லிங்க சரீரமென்று பெயர் வந்தது. பச்சிம சரீரத்திற்குக் காரண சரீரம் என்று பெயர் எதனுல் வந்ததெனில். இவ்விரண்டு சரீரங்களையும் பிறப்பிக்கிறபடியினுல், அதற்குக் காரண சரீரமெனறு பெயர் வந்தது. ஸ்தூலசரீரம் பிரத்தியக்ஷமாய்த் தெரிகிறபடியினுல் உண்டென்று சொல்லலாம். இதைப்போல், பிரத்தியக்ஷமாய்த் தெரியாதபடியினுல், ஸ்தூலத்திற்கன்னியமான சூட்சும சரீரத்தை யெப்படியுண்டென்று சொல்லுகிறதென்னில், இருபதுவிதமான காரியத்தைக் குறித்துச் சூட்சும சரீரம் உண்டென்று கூறலாம்.

இந்த இருபதுவிதமான காரியங்களும் ஸ்தூல சரீரத்தினுற் செய்யப்படுகிறது என்று சொல்லுவோமேயென்னில், சுழுத்தி மூர்ச்சை மரணம் வந்த

போது இந்த ஸ்தூல சரீரத்தினுல் இருபதுவிதமான காரியம் பண்ணவேண்டும். அங்ஙனம் பண்ணுதபடியினுல், ஸ்தூல சரீர காரியமென்று சொல்லக்கூடாது. மற்றெதனுடைய காரியமென்னில், ஸ்தூலத்திற் கன்னியமான சூட்சுமரீர காரியமென்று சொல்லவேண்டும். ஸ்தூலத்தை விட்டு சூட்சும சரீரம் சுதந்தரமாய் ஒரு காரியமுஞ் செய்யாதபடியினுல், சூட்சும சரீரகாரிய மென்று எப்படி யறிகிறதென்னில், திருஷ்டாந்தத்தில் அக்கினியானது கட்டையை யநுசரித்துச் சுட்டு, தன்னுருவமாக்கிக் கொண்டு, தாகபாகாதி கிரியைகளைப் பண்ணினுலும், அவைகள் கட்டையின் காரிய மில்லாததுபோல், தாஷ்டாந்தத்தில் சூட்சும சரீரமும் தூலசரீரத்தை யாசிரயித்து, இருபதுவிதமான காரியங்களைப் பண்ணினபோதும், கேவலமான தூலத்திற் கன்னியமான சூட்சும சரீரத்தின் காரியமென் றறியவேண்டும்.

இவைகளுக்குச் சரீர மென்று பெயர் எதனுல் வந்ததென்னில், ஜீரணித்துப் போகிறபடியினுற் சரீரமென்று பெயர் வந்தது. இதனை விரித்துப் பூர்வகமாய்ச் சொல்லவேண்டுமென்னில், இந்த ஸ்தூல சரீரமும், இளமையினுலும் நோயின்மையினுலும், அன்னம் சமமானதினுலும் விருத்தியாகின்றது. அன்னமின்மையினுலும், அன்ன மதிகமானதினுலும், வியாதியினுலும், முதுமையினுலுஞ் சீரணமாகின்றது. சூட்சுமசரீர மெப்படியென்னில், இராகத்துவேஷாகாரமாய்ப் பரிணமிக்கிறதே விருத்தி. அவற்றின் சங்கோசமே ஜீரணத்துவம். காரண சரீரமெப்படி யென்னில் அகமமதாதியால் எனதென்கிற அபிமானத்தினுற்தே பரிணமிக்கிற விருத்தி. அவற்றின் சங்கோசமே ஜீரணத்துவம். சூட்சும காரண சரீரங்களுக்கு விருத்தி ஜீரணத்துவம் எங்கே காணப்படுகின்ற தென்னில், அஞ்ஞானிகளிடத்தில் விருத்தியும். முமுட்சுவினிடத்தில் சங்கோசமும் காணப்படுகின்றன, ஆதலால்,



இவைகளுக்குச் சரீரமென்று பெயர் வந்தது, தேகமென்று பெயர் எதனுல் வந்ததென்னில், தகிக்கப்படுவதினுற் றேக மென்று பெயர் வந்தது எப்படித் தகிக்கப்படுவதென்னில், சில ஸ்தூல சரீரங்கள் அக்கினியிற் பஸ்பாகாரமாக்கப்படுகின்றன. ஆனுல், சூட்சும காரண சரீரங்கள் எப்படி தகிக்கப்படுகின்றதென்னில் சர்வதா தாபத்திர யங்களினுல தகிக்கப்படுகிற சூட்சும காரண சரீ

ரங்கள் ஞானக்கினியினற்றகிக்கப்படுகின்றன. ஆத லால், இந்தச் சரீரங்களுக்குத் தேகமென்று பெயர் வந்தது என்றறிக.

இவற்றுள், ஆறுதத்துவங்கள் ஆவன -- இவை களிற் சட்கோச தத்துவங்களாவது யாதெனில்,

சர்மம் — வெங்காயப் புரைப்போல் ஏழு புரையா யிருக்கின்ற தோல்களும்,

உதிரம் — எட்டஞ்சலியளவுள்ள ரத்தமும்,

மாமிசம் — இரண்டு துலா நிறையுள்ள தசையும்,

சனயு — எழுபத்திராயிரங் கணிதமுள்ள நரம்பு களும்,

அத்தி — முந்நூற்றறுபது கணிதமுள்ள என் புகளும்,

மச்சை — இரண்டு அஞ்சலியளவுள்ள கொழுப்புகளும்,

இவைகளாம் — இங்ஙனங் கூறிய ஆறு தத்துவங் களின் அர்த்தங்களாம்.



நால்வகைத் தோற்றங்களாவன — சதுர்விதப் பிறப்புக்களாவன.

சராயுசம் — பையிற் கட்டுப்பட்டு யோனி மூல மாய்ப் பிறப்பதும்,

அண்டசம் — முட்டையிற் கட்டுப்பட்டு பிறப் பதும்,

சுவேதசம் — வியர்வையி னிடமாய்ப் பிறப்பதும்,

உற்பிசம் — பூமியினிடமாய்ப் பிறப்பதும்: அன் றியும், சராயு வென்றது பை; சம்-என்றது அப்பை யுளிருந்து உற்பவிக்கும் மானுடர் விலங்கு முதலியன வாம்; அண்டம்-என்றது முட்டை, சம்-என்றது அம் முட்டைக்குளிருந்து உற்பவிக்கும், பக்ஷி பன்னக முதலியனவாம். சுவேதம் என்றது வியர்வை; சம்- என்றது அவ்வியர்வைக்கு ளிருந்து உற்பவிக்குந் தலைப் பேன். சீலைப்பேன், முதலியனவாம்; உற்பி யென்றது பூமி, சம் என்றது அப்பூமிக்கு ளிருந்து உற்பவிக்கும் விருக்ஷம் புல் முதலியனவாம்;

இவைகளாம் — இங்ஙனங் கூறிய நால்வகைத் தோற்றங்களாம்.

மூவகைச் சாதிகளாவன -- திரிவித குலங்களவான

இகலோக — இகலோகக் கிருத்தியத்தைக் குறித்தும்,

பரலோகபுத்தி — பரலோக கிருத்தியத்தைக் குறித்தும் வரும் அறிவும்,

இருவகையுங் கொடுக்கின்ற — இந்த வுபய கிருத்தியங்களைக் குறித்து வரும் விவேகமுள்ள,

மானிடசரீரம் — மனுஷ சரீரம்

உத்தமஜாதி — நன்மை யுள்ள குலமாம். இவைகளில், இகலோக கிருத்தியமாவன, தரித்திரம், நோய், சத்துருவின் துன்பங்களை நீக்கி, சிற்கு சந்தனம் வனிதாதி விஷய போகங்களை யநுபவிப்பதற்கு ஏதுவான உழவு தொழவு வரைவு வாணிபம் வித்தை சிற்பம் முதலியவாம், இவைகளில், உழவாவன—உழுது பயிர் செய்தல் முதலிய தொழில்களைச் செய்துவருதலும், தொழவாவன — ஒருவருக்குத் தாழ்ந்து வணங்கிச் சேவித்து, அவர்களிடும் பணிகளைச் செய்துவருதலும், வரைவாவன — கணக்கு முதலிய விவகாரங்களைச் செய்துவருதலும், வாணிபமாவன — செட்டுமுதலிய தொழில்களைச் செய்து வருதலும், வித்தையாவன



—கல்விமுதலிய பல வித்தைகளை விவகரித்து வருதலும், சிற்பமாவன—விச்சுவ தர்மமுதலிய சிற்ப நூல் முப்பத்திரண்டிலும் சொல்லியபிரகாரம், கல், உலோகம், செங்கல், மரம், மண், சுதை தந்தம், வண்ணம், கண்டசர்க்கரை, மெழுகுமுதலிய உறுப்புக்களைக்கொண்டு தொழிற்செய்துவருதல் முதலியவாம்.

இனி, பரலோக கிருத்தியமாவன — நரக துன்பங்களை நீக்கி, ரம்பா சம்போகம், அமிர்தாதி போகங்களை அநுபவிப்பதற்கேதுவான, யாக தான தர்ம தவ விரத மந்திர ஜெபமுதலியவைகளாம். இவைகளில், யாகமாவன — அக்கினிஷ்டோமம் முதலிய யாகம் இருபத் தொன்றையும் செய்து வருதலாம். அவையாவன, அக்கினிஷ்டோமம் அத்தி அக்கினிஷ்டோமம், உத்தியம், சோடசி, வாஜபேயம், அதிராத்திரம், அப்தோரியாமம், அக்கினியாதேயம், அக்கினிகோத்திரம், தரிசபூரணமாசம், சாதுர்மாசியம், நிரூடம், பசுபந்தம், ஆக்கிராயணம், சௌத்திராமணி, அஷ்டகை, பார்வணம், சிரார்த்தம், சிராவணி, ஆக்கிரகாயணி, சைத்திரி, ஆசுயுவசி முதலியவாம். தானமாவன—அன்னதான முதலிய சோடசதானங்களைச்

செய்துவருதலாம். அவையாவன—அன்னதானம், வஸ்திரதானம், பூதானம், கன்னிகாதானம். இரணிய தானம், கோதானம், உபயமுகி கோதானம், மகிஷ தானம், வருடதானம், அஸ்வதானம், சுவேதாஸ்வ தானம், கஜதானம், காளாமுகிதானம் மகாமேரு தானம், கற்பகவிருக்ஷதானப், வித்தியாதானம், முதலியவாம்.

தர்மமாவன.— அறச்சாலை முதலிய தர்மம் முப்பத்திரண்டையும் செய்து வருதலாம். அவையாவன :— தரித்திரவான்களுக்கு அறத்தின்சாலை யமைத்தலும், பிக்ஷையிடுதலும், அறுசமயத்தார்க்கு அன்னமிடுதலும், படிப்பவர்களுக்கு அன்னமிடுதலும், புருடர்களுக்கு வஸ்திரமீதலும். ஸ்திரீகளுக்குப் புடவை யளித்தலும், தரித்திரவான்களுக்கு ஸ்திரீபோக மளித்தலும், குழந்தைகளுக்குப் பால் கொடுத்தலும், ஸ்திரீகள் பிரசவ காலத்தில் பாதுகாத்தலும், குழந்தைகளை வளர்த்தலும். நோய்க்கு மருந்திடுதலும், கொலை நேரிட்டாவைகளுக்கு விலைகொடுத்து உயிரைக் காப்பாற்றுதலும், கண்ணுடி யிடுதலும், அந்நியர் குடும்பத்தைக் காப்பாற்றுதலும்,



கன்னிகாதானஞ்செய்தலும், வனபரிபாலனஞ் செய்தலும், வண்ணுன் நாவிதன் இவர்களால் வறியவர்க்குத் தொழில் செய்வித்தலும், முனிவர்கள் வசிக்க மடம் உண்டுபண்ணி, வைத்தலும், தடாக முண்டாக்குதலும், நேத்திர நோய்க்கு மருந்திடுதலும், தண்ணீர்ப்பந்தல் வைத்தலும், அழகிய மயிர்த்தலைகளுக்கெண்ணெயிடுதலும், சிறையி லிருப்பவர்களுக்கு அன்னமிடுதலும், மிருகங்களுக்கு இரையிடுதலும், பசுக்களுக்கு வாயுறை கொடுத்தலும், ஏழையர்கள் பிரேதங்களை யடக்கஞ் செய்தலும், வறியவர்களுக்கு நல்ல வஸ்திர மீதலும், தடையின்றி யிடபம் விடுதலும், இனிய பதார்த்தங்களை நிரம்ப அளித்தலும், கோ முதலியவைகள் பரிசித்து உராய்ஞ்சுவதற்கு உறுதியாகக் கல்நாட்டி வைத்தல் முதலியவாம், தவமாவன: — பத்மாசன முதலிய அஷ்டவித ஆசனங்களிலும், பஞ்சாக்கினி மத்தியிலும், இருந்து செய்யும், தவ முதலியவாம். விரதமாவன — கிரிச்சரம், சாந்திராயண முதலிய விரதங்களை முடித்தலாம், மந்திர ஜெபமாவன — பஞ்சாக்ஷரமுதலிய மந்திர ஜெபங்களாம்.

பரலோக புத்தியை மறைத்து — பரலோகத்தை

யடைதற் கேதுவான கிருத்தியஞ்செய்யும் பகுத்தறி வில்லாமல்,

இகலோக புத்திமாத்திரம் — இகலோகத்தில், அருந்தல், பொருந்தல்களைக் குறித்துவரும் விவேக மட்டும்,

கொடுக்கின்ற பசு பக்ஷிமுதலானவை — தராநின்ற கோக்கள் பறவைகள் முதலானவைகள்,

மத்திமஜாதி — நடுவான குலமாம்.

இரண்டுலோகத்துப் புத்தியையும் — இகலோக பரலோக கிருத்தியங்களின் விவேகத்தையும்,

மறைத்திருக்கின்ற — மூடி யிருக்கின்ற

மரம் கொடி செடிமுதலியவை — விருக்ஷம் கொடி செடி முதலானவைகள்,

அதமஜாதி — கடையான குலம்.

இப்படிப் பிருதுவி தத்துவமாய் இருக்கின்ற — இவ்வண்ணம் பிருதுவி தத்துவமாயிராநின்ற,

பூலோகத்தில் — மண்ணுலகத்தில்



கண்டாற்போல — பார்த்ததற்கொப்பாய்,

அப்பு அக்கினி வாயு ஆகாசம் என்னப்பட்ட — ஜலம், தேயு, வளி, வெளி யென்று கூறுநின்ற

தத்துவங்களாய் நிரைநிரையே — தத்துவங்களாய் வரிசை வரிசையாக,

இருக்கின்ற — இராநின்ற

பிதிர்லோகம், தேவலோகம், யக்ஷ கந்தர்வ, சித்தர் லோகங்களிலும் — அப்புலோகம், அக்கினிலோகம், வாயுலோகம், ஆகாசலோகங்களிலும்,

நக்ஷத்திரமாகத் தோற்றுகின்ற — உடுக்களாதியாகக் காணப்படுகின்ற

சந்திரன் முதலான பிதிர்க்கள் — சசிமுதலாகிய பிதிர்க்களும்.

சூரியன் முதலான தேவதைகள் — ஆதித்தன் முதலான தேவர்களும்,

கந்தர்வர் — கந்தர்வர் முதலியவர்களும்,

சித்தர் என்னப்பட்டவர்கள் — சித்தர் முதலியவர்களும்.

உத்தமஜாதி — நன்மையுள்ள குலமாம்.

காமதேனு — காம தேனு வென்னும் ஐந்து விதப் பசுக்கள் முதலியவைகளும்,

ஐராவதம்–ஐராவதம் என்னும் யானைமுதலியவை களும்,

அன்னம் — அம்ச முதலியவைகளும்,

கருடன் — கலுழனும்

முதலிலானவை மத்திமஜாதி — முதலியவைகள் நடுவானகுலமாம்.

கற்பகவிருக்ஷம் பாரிசாதம் — கற்பகத்தரு, பாரி சாதம்

முதலானவை அதமஜாதி — முதலியவைகள் கடையான குலமாம்.

இந்தத் தூல சரீரமே — இங்ஙனங் கூறிய தூலதேகமே,

அன்னமய கோசமாம் — அன்னமய கோசம் என்பதாம். இதற்கு அன்னமய கோசம் என்று பெயர் வந்தகாரண மென்னையெனில், மாதா பிதா



புசித்த அன்ன வீரியமே, சுக்கில சுரோணிதாகார மாய்ப் பரிணமித்து, அம்மாதாவின் உதரத்தில் கருப் பமாகத் தரித்து, அம் மாதா புசித்த அன்ன சாரா மிர்தங்களை யுண்டு, ஒவ்வொரு திங்கடோறும் விருத் தியடைந்து, கரசரணுதியவயவாகாரமாகத் தடித்து, பத்தாந்திங்களிற் பூமியின் கண் உற்பவித்து, பின் னும் அன்னை யுண்ட ரசாமிர்தங்களையே யுண்டு, திரும்பவும் அன்னத்தையே யருந்தி, அன்ன சொரூப மாக விருத்தலால், இதற்கு அன்னமய கோசமென்று பெயர் வந்தது. இதற்கு அன்னமய மென்று நாமம் வந்த காரண மென்னையெனில், சனித்து, அன்னத்தினுல் விர்த்தித்திருக்கிறபடியினுல், அன்னமய மென்று நா மம் வந்தது. இதற்குக் கோசம் என்று பெயர் வந்த காரண மென்னை யெனில், உறையாதி கத்தியாதியை யெப்படி மறைத்ததோ, அப்படியே அகம் சத்தத்திற் கருத்தமாய், நான் பிராமணன், நான் க்ஷத்திரியன் நான் வைசியன் நான் சூத்திரன் என்றும்,

நான் பிரமசரியன், நான் கிரகஸ்தன், நான் வானபிரஸ்தன், நான் சன்னியாசி யென்றும், நான் புருஷன், நான்ஸ்திரீ, நான் நபும்சகனென்றும்,

நான் பிண்டமானேன், பிறந்தேன், வளர்ந்தே னென்றும், நான் பருத்தே னிளைத்தே னென்றும், நான் குறிய னெடியனென்றும், இந்த அன்னமய கோசமே ஆன்மாவாக அனுபவத்திற்கு வருகிறபடியினல், கோச மென்று பெயர் வந்தது.

சூட்சும சரீரம் — சூட்சும தேகமானது

மூன்று கோசங்களா யிருக்கும் — திரிகோசங்களாயிருக்கும்,

அ:தெங்ஙன மெனில் — அ:தெப்படியென்றல்

பிராணவாயுவுங் கன்மேந்திரியங்களும் கூடி— பிராணுதி பஞ்சகமும், கன்மேந்திரிய பஞ்சகமும் ஆகிய பத்துஞ் சேர்ந்தது,

பிராணமயகோசம்—பிராணமய கோசமாம். இதற்குப் பிராணமயம் என்று நாமம் வந்த காரணம என்னையெனில். பசிதாக முதலிய உசுவாச நிசுவாசஞ் செய்கின்றபடியினல், பிராணமயம் என்று நாமம் வந்தது. இதற்குக் கோச மென்று பெயர் எதனல் வந்ததென்னில், கௌசனையானது தம்பூரையெப்படி மறைத்ததோ, அப்படியே அகஞ்



சத்தத்திற் கருத்தமாய், நான் பசிதாக முதலிய உசுவாச நிசுவாசஞ் செய்கின்றவ னென்றும், நான் பலவான் பலவீனனென்றும், யான் வசனுதி போக்குவரத்துக் கிரியை செய்கின்றவ னென்றும், யான் கொடுக்கல் வாங்கல் கிரியை செய்கின்றவனென்றும், யான் மலவிசர்ச்சனஞ் சலவிசர்ச்சனஞ் செய்கின்றவ னென்றும், இந்தப் பிராணமய கோசமே ஆன்மாவாக அனுபவத்துக்கு வருகின்றபடியினல் கோசமென்று பெயர் வந்தது பிராணுதி பஞ்சகமும், கன்மேந்திரிய பஞ்சக முமாகிய பத்தும் கூடியது பிராணமய கோசமாக விருக்க, பிராணமய கோசமென்று பிராணனை வேறுபிரித்துக் கூறிய தென்னையெனில், குடைக்காரனுடன் செல்கின்ற கூட்டத்தைவிட்டுக் குடைக்காரன் செல்கின்று னென்று வேறுபிரித்துக் கூறியதுபோலப் பிராணனை விசேஷமாகக் கூறியது,

மனதும் ஞானேந்திரியங்களுங் கூடி—மனமும் ஞானேந்திரிய பஞ்சகமும் ஆகிய ஆறுங் கூடியது.

மனேமயகோசம் — மனேமய கோசமாம். இதற்கு மனேமய மென்று பெயர் எதனல் வந்ததெனில். மனேசங்கற்பமே. தேகாதி பிரபஞ்சமாகத் தோற்று

கிறபடியினல், மனேமய மென்று பெயர் வந்தது. இதற்குக் கோச மென்று பெயர் வந்த காரண மென்னேயெனில் பசரிக்காய்க் கூடானது புழுவை யெப்படி மறைத்ததோ, அப்படியே அகஞ் சத்தத்திற் கருத்தமாய், நான் சங்கற்பவான, விகற்பவானென் றும், யான் சமுசயவான் சாஞ்சல்யவானென்றும், யான் காமியென்றுங் குரோதி யென்றும், நான் மனேவேகியென்றும் போகி யென்றும். நான் செவி டன் நான் குருட னென்றும், இந்த மனேமய கோசமே ஆன்மாவாக அநுபவத்துக்கு வருகின்றபடி யினல், கோசமென்று பெயர் வந்தது. மனதும் ஞானேந்திரியமுங் கூடியது மனேமய கோசமாக விருக்க, மனதை வேறுபிரித்துக் கூறிய தென்னே யெனில், குதிரைக்காரனுடன் செல்கின்ற கூட்டத்தை விட்டு, குதிரைக்காரன் செல்கின்ருனென்றுவேறு பிரித்துக் கூறியதுபோல, மனதை விசேஷமாகக் கூறியது,

புத்தியும் ஞானேந்திரியங்களுங் கூடி — மதியும், ஞானேந்திரிய பஞ்சகமு மாகிய ஆறுங் கூடியது,

விஞ்ஞானமயகோசம் — விஞ்ஞானமய கோச



மாம். இதற்கு விஞ்ஞானமயமென்று பெயர் வந்த காரண மென்னேயெனில், எதிரிட்ட சகல விஷயங் களேயும் அறிகின்றபடியினல், விஞ்ஞானமய மென்று பெயர் வந்தது, இதற்குக் கோசமென்று பெயர் எதனல், வந்ததெனில் அரைச்சட்டையானது புருடனே யெப்படி மறைத்ததோ, அப்படியே அகஞ்சத்தத்திற் கருத்தமாய், நான் கர்த்தா, நான் நிச்சயவான். நான் புத்திமான் நான் யூகி, நான் விவேகி, நான் ஏகசந் தக்கிராகி யென்று இந்த விஞ்ஞானமய கோசமே, ஆன்மாவாக அநுபவத்துக்கு வருகிறபடியினல், கோசமென்று பெயர்வந்தது. புத்தியும் ஞானந்திரிய பஞ்சகமுங் கூடியது, விஞ்ஞானமய கோசமாக விருக்க, விஞ்ஞானமய கோசமென்று புத்தியை வேறுபிரித்துக் கூறிய தென்னேயெனில் பல்லக்குக் காரனுடன் செல்கின்ற கூட்டதை விட்டு, பல்லக் குக்காரன் செல்கின்ருனென்று வேறுபிரித்துக் கூறியதுபோலப் புத்தியை வேறு பிரித்துக் கூறியது.

காரண சரீரமே — காரண தேகமே

ஆனந்தமயகோசம் — ஆனந்தமய கோசமென்ப தாம். காரண சரீரம் ஆனந்தமய கோசமானல் எப்

படியறிகிறது. இதனை நன்ருகத் தெரிவிக்க வேண்டு மென்னில், வனிதாதி யஷ்ட விதமான இஷ்ட விஷயத்தில் வருகிற பிரியமோதப் பிரமோதாதி விருத்தியுடனே கூடியிருக்கின்ற, அந்தக்கரண அஞ்ஞான பிரதானமாய் எவ்வளவு பரியந்தம் தோன்றுகிறதோ அந்த அஞ்ஞானமே ஆனந்தமயகோசம். இதற்கு ஆனந்தமயமென்று நாமம் வந்த காரண மென்னை யென்னில், நானுகார மில்லாமல் ஏகாகாரமா யிருக்கின்றபடியினுல், ஆனந்தமயமென்று நாமம் வந்தது. இதற்குக் கோசமென்று நாமம் வந்ததன் காரண மென்னையெனில், புளியம் பழத்து ஓடு புளியம் பழத்தை யெப்படி மறைத்ததோ, அப்படியே அகஞ் சத்தத்திற் கருத்தமாய், நான் போக்தா, நான் அஞ்ஞானி, நான் சந்துஷ்டன், நான் ஒன்றையு மறியாதவன், நான் அசக்தன், நான் பிராந்தன், நான் சோம்ப னென்று இந்த ஆனந்தமய கோசமே, ஆன்மாவாக அநுபவத்துக்கு வருகின்றபடியினுல், கோச மென்று நாமம் வந்தது.

இப்படிப் பஞ்சகோசம் சொல்லப்பட்டன — இந்தப் பிரகாரம் ஐந்து கோசங்கள் கூறப்பட்டன.



ஆறு தத்துவங்களாயிருக்கின்ற — சட்கோச தத்துவங்களா யிராநின்ற,

ஸ்தூல சரீரத்திலே — பருமையான தேகத்திலே

இருபது தத்துவங்களா யிருக்கின்ற — தத்துவங்கள் இருபதா யிராநின்ற

சூட்சும சரீர மிருக்கின்றது — நேர்மையான சரீர மிருப்பது,

அ:தெப்படி யென்னில் — அ:தெவ்வண்ண மென்ருல்

கன்மேந்திரியங்களுக்குள் வாக்கும் — கன்மேந்திரிய பஞ்சகத்தில் வாக்கிந்திரியமும்,

ஞானேந்திரியங்களுள் சிங்நுவையும் — ஞானேந்திரிய பஞ்சகத்தில் சிங்நுவை யிந்திரியமும்,

வாயிலிருக்கும் — வாக்கி னிடமாக விருக்கும்.

உதானவாயுவும் மனதும் — உதானபவனமும் மானதமும்,

கண்டத்திலேயிருக்கும் — கழுத்திலே யிருக்கும்.

பிராணவாயுவும் புத்தியும் — பிராண பவனமும் மதியும்,

இருதயத்திலே யிருக்கும் — இருதய ஸ்தானத்திலே யிருக்கும்.

சமானவாயுவும் சித்தமும் — சமானபவனமும் சிந்தையும்,

நாபியிலிருக்கும் — உந்திஸ்தானத்தி லிருக்கும்.

அபானவாயுவும பாயுருவும் — அபானபவனமும் பாயுரு இந்திரியமும்

குதத்திலிருக்கும் — குத ஸ்தானத்திலிருக்கும்.

வியானவாயுவும், ஞானேந்திரியங்களுள் துவக்கும் — வியான பவனனும், ஞானேந்திரிய பஞ்சகத்தில் தொக்கிந்திரியமும்

அகங்காரமும் — அகம்பாவமும்

சர்வாங்கமும் வியாபித்திருக்கும் — சரீரமுழுவதுஞ் சூழ்ந்துகொண் டிருக்கும்.

உச்சியிலே உள்ளமும் — சிரசினுச்சியிலே தேஜசும்,



கருவிழி நுனியிலே சட்சு இந்திரியமும் — கரிய நயன முனையிலே நேத்திரேந்திரியமும்,

காதிற்குள்ளே சுரோத்திரேந்திரியமும் — செவிக்குள்ளே கேள்வி யிந்திரியமும்,

மூக்கு நுனியிலே கிராணேந்திரியமும் — நாசிமுனையிலே ஆக்கிராணேந்திரியமும்,

கழுத்துக்கு மேலே தனித்தனியே யிருக்கும் — கண்டத்துக்கு மேலே வியஷ்டி வியஷ்டியாகவைகும்.

கழுத்துக்கீழே — கண்டத்திற்குக்கீழே

கை கால் குய்யங்களில் — அஸ்தம் பாதம் யோனி லிங்கங்களில்,

பாணிபாதம் உபஸ்தம் மூன்றும் — பாணீந்திரியமும், பாதேந்திரியமும், உபஸ்தேந்திரியமு மாகிய மூன்றும்,

தனித்தனியே யிருக்கும் — வியஷ்டி வியஷ்டியாகத் தங்கும். சிலர் இந்தக் கட்டத்தில் சூட்சும சரீரம் விவகரிக்கின்றதாக வுரை சொல்லுவார்கள். இந் நூலாசிரியர், இந்தச் சூட்சும சரீரம் ஸ்தூல

சரீரததில் அந்தர்ப்பூத மாகியிருப்பதைமட்டும் தெரிவித்தலாலும், பூர்வம் சூட்சும தேக வுற்பத்தியில் இந்தச் சூட்சும சரீரம் தொழிற் படுகின்றதை விசார பூர்வகமாகச் சொல்லியிருப்பதனுலும், இங்ஙனங்கூரு தொழிந்ததென் றறிக. இனி, முந்தின சரீரத்திற்குக் காரண சரீரமென்று நாமமிருப்பதால், இந்த ஸ்தூல சூட்சும மிரண்டையும், காரிய சரீர மென்று சொல்லவேண்டும், இதற்கு ஏது என்னை யெனில்:—

இப்படி ஸ்தூல சரீர தத்துவங்கள் ஆறு — இவ்வண்ணம் தூல தேக சரீர தத்துவங்களாறு,

அதிற் குடிபுகுந்த — அந்த ஸ்தூல தேகத்திற் குள்ளாகக் குலமாகப் பிரவேசித்த,

சூட்சும சரீர தத்துவங்கள் இருபது — லிங்க தேகதத்துவங்கள் இருபது,

ஆக தத்துவங்கள் இருபத்தாறும் — ஆகிய இருபத்தாறு தத்துவங்களும்,

பஞ்ச பூதங்களின் காரியமானபடியினுலே — ஸ்தூல சூட்சும மென்கின்ற இருவித பஞ்ச பூதங்களி னுடைய விவகார மாகிய தன்மையினுலே,



ஒருமைப் பாடாகக் காரிய சரீரமென்று சொல்லப்படும் — ஒற்றுமையாகக் காரிய தேகங்களென்று கூறப்படும்

அவித்தையாப் பிரதிபிம்பனுன சிதாபாசன், இந்த இருபத்தாறு தத்துவத்துடனுங் கூடி, சாக்கிராவஸ்தையைப் பொருந்தும்போது, அவனுக்கு அபிமான நாமம் யாதென்னில்:—

அவித்தையில் பிரதிபிம்பித்த — அஞ்ஞானத்திற் பிரதிபலனமான,

சிதாபாசன் சாக்கிரத்திலே — சீவனுனவன் நனவவஸ்தையிலே,

இந்த இருபத்தாறு தத்துவங்களுடனே — இங்ஙனங் கூறிய தத்துவங்க ளிருபத்தாறுடனே,

கலந்து நின்றபோது — புணர்ந்திருந்த காலையில்,

விஸ்வ னென்றும் — விஸ்வ னெனவும்,

வியவகாரிக ஜீவ னென்றும், வியவகாரிக ஜீவ னெனவும்,

சொல்லப்படுவன் — கூறப்படுவன். இனி, சாக்

கிராவஸ்தையாவது யாது? அஃதெந்தமட்டு முள தென் றறிகிறதென்னில், இங்ஙனங் கூறிய கரணேந் திரியங்க ளனைத்தும், பாகியார்த்த ஞானத்தால் விஷயாகாரமாய்ப் பரிணமித்து, கர்த்திருத்துவாதி யாகாரமாய்ப் பூர்வ பூர்வ நினைப்புடன் ஸ்திரமாக எந்தமட்டும் வியவகரிக்கப் படுகின்றதோ, அந்த மட்டும் சாக்கிராவஸ்தையென் றறிய வேண்டும் இதனை யபிமானித்த சிதாபாசனுக்கு விசுவனென்று நாமம் வந்த தென்னையெனில், சமஸ்த பிரபஞ்சங்களையும் என தென்று அபிமானித்திருக்கின்றபடியினால், விசுவனென்று நாமம் வந்தது. இவனுக்கு வியவகாரிக ஜீவ னென்று நாமம் வந்த காரணமென்னையெனில், கர்த்தாவாக விருந்து சமஸ்த வியவகாரமும் பண்ணுகிற படியினால், வியவகாரிக சீவனென்று நாமம் வந்தது. இந்தச் சீவன் அந்தக்கரணத்துடன் கூடி, சொற் பனவஸ்தையை யடைகின்ற போது, அபிமான நாமம் யாதென்னில்,

சொற்பனத்திலே ஸ்தூல சரீரத்தை விட்டு — கனவவஸ்தையிலே ஸ்தூல தேகத்தை நீக்கி,

அந்தக்கரணத்துடனே — அகக்கரணத்துடனே



கூடி நின்றபோது — புணர்ந்திருந்த காலையில்,

தைஜதனென்றும் தைஜத னெனவும்,

பிராதிபாஸிக ஜீவனென்றும் — பிராதிபாசிக ஜீவனெனவும்,

சொற்பன கற்பிதனென்றும் — சொற்பன கற் பித னெனவும்,

சொல்லப்படுவன் — கூறப்படுவன். சொற்பன வஸ்தையாவது யாது? அஃதெந்தமட்டுமுளதென்ற றிகிற தென்னில். — பாகியார்த்தக் ஞானமின்றி, பூர்வாபூர்வ நினைப்பின்றி, சாக்கிரவாசனைப் பிர காரம் விஷயாகாரமாய்ப் பரிணமித்து, கர்த்திருத்து வாதியாகாரமாய் ஸ்திரமன்னியில் அஸ்திரமாக எந்த மட்டும் விவகரிக்கப்படுகின்றதோ, அந்த மட்டுக்கும் சொற்பனவஸ்தை யென்று அறிய வேண்டும். இதனை யபிமானித்த சிதாபாசனுக்குத் தைஜதனென்று நாமம் வந்த தென்னை யெனில், தேஜோமயமான அந்தக்கரண விருத்தியுடன் கூடிக் கொண்டிருப்பதனாலும், பிரகாச சொரூபனாயும், சொற்பனத்துக்கு அபிமானியாயு மிருக்கின்றபடி

யினாலும், தைஜத னென்று நாமம் வந்தது.

இவனுக்குப் பிராதிபாஸிக ஜீவ னென்று நாமம் வந்த தென்னையெனில், தோற்றுகின்ற காலத்தின் மாத்திர மிருப்பதினாலும், சொற்பனவஸ்தையிற் றேன்றிக் கெட்டுப்போகின்றபடியினாலும், பிராதி பாஸிக ஜீவனென்று நாமம் வந்தது. இவனுக்குச் சொற்பன கற்பித னென்று நாமம் வந்த தென்னை யெனில. அஞ்ஞானகாரியமான நித்திராசத்தியினால், கற்பிக்கப்பட்ட சொற்பனத்தை யபிமானித்தபடியி னாலும், அச் சொற்பனத்தை தத்தான் கற்பித்தபடியி னாலும், சொற்பனந் தன்னைக் கற்பிக்கின்றபடியி னாலும், சொற்பன கற்பித னென்று நாமம் வந்தது. இந்தச் சிவன் காரண சரீரத்துடனே கூடிச் சுழுத் தியவஸ்தையை யடைகின்ற போது அபிமான நாமம் யாதென்னில்,

சுழுத்தியிலே — முன் சாக்கிர சொற்பன வாசனைகளுக்குப் பீஜமாயும், அஞ்ஞான மயமாயு மிருக்கின்ற சுழுத்தி யவஸ்தையில்,

காரிய சரீர தத்துவங்கள் — காரிய தேகங்க ளாகிய தத்துவங்கள்,



இருபத்தாறையுங் கைவிட்டு — இருபத்தாறை யுந் துறந்து,

காரண சரீரத்தைமாத்திரம் — காரண தேகத்தை மட்டும்

பொருந்தியிருக்கும்போது — சம்பந்தித்திருக்குங் காலையில்,

பிராக்ஞனென்றும் — பிராக்ஞ னெனவும்

பாரமார்த்திக ஜீவ னென்றும் — பாரமார்த்திக ஜீவ னெனவும்,

சொல்லப்படுவன் — பிரதிபாதிக்கப்படுவன். இனி, சுழுத்தி யவஸ்தையாவது யாது? அஃதெந்த மட்டு முளதென்கிற தென்னில். பாகியார்த்த ஞானமும், விஷயாகாரமும், பூர்வாபூர்வ நினைப்பும், கர்த்திருத்துவாதியாகாரமும். ஸ்திரம் அஸ்திரமு மாகிய இவைகளனைத்துமின்றி, புத்திதானே கார ணாத்மகமாக எந்த மட்டுக்கும் அடங்கி யிருக்கின்ற தோ, அந்த மட்டுக்குஞ் சுழுத்தி யவஸ்தை யென் றறியவேண்டும். இதனை யபிமானித்த சிதாபாச

னுக்கு பிராக்ஞ னென்று நாமம்வந்த தென்னை யெனில், சொற்பிரகாச சொரூபமா யிருக்கின்றபடி யினுலும், அந்தக்கரண வியாபார மின்றி சுழுத்தி யவஸ்தையை யறிந்துகொண் டிருக்கின்ற படியினு லும், மிகுந்த அறிவையுடையவ னுதலாலும், பிராக் ஞனென்று நாமம் வந்தது. இவனுக்குப் பார மார்த்திக ஜீவ னென்று நாமம் வந்ததென்னை யெனில், அவஸ்தாத்திர யங்களிலும், அநுசூதமாயி ருக்கின்றபடியினுலும், சுழுத்தி யவஸ்தையிற் ருேன்றிக் கெடாமல் ஒரே பிரகாரமா யிருக்கின்ற படியினுலும், பாரமார்த்திக ஜீவ னென்று நாமம் வந்தது. இவைகளுக் கெல்லாம் அதிஷ்டானமாயும் விலக்ஷணமாயும், சுயம்பிரகாச சொரூபமாயு மிருக் கின்ற நிருபாதிக பிரம சைதன்னியம், இங்ஙனங் கூறிய அவஸ்தாத்திரயங்களுக்குச் சாக்ஷியாக விருந்து, அவைகளை வியஷ்டியாகவுஞ் சமஷ்டியாக வும் அறியுங்காலையில் அவருக்குப் பரியாய நாமம் யாதென்னில்

பிரம சைதன்னியமும் — பிரமக்ஞானமும்

சாக்கிரத்துக்கு — சித்துவிலாசமா யிருக்கின்ற



நனவவஸ்தைக்கு

சாட்சியா யிருக்கின்றபோது — சான்ருக விருக்குங்காலையில்,

சிவாத்மா என்றும் — சிவாத்மா வெனவும்,

சொற்பனத்திற்கு — சாக்கிரத்துவாசனுமயமாகிய கனு வவஸ்தைக்கு

சாட்சியா யிருக்கும்போது — கரியாயிருக்குங் காலையில்

அந்தராத்மா என்றும் — அந்தராத்மா எனவும்,

சுழுத்திக்கு — சாக்கிர சொற்பன பிரபஞ்ச மெல்லாவற்றிக்கும் பீஜமாகியும், பிரபஞ்ச தோற் றரவற்றிருக்கின்ற சுழுத்தியவஸ்தைக்கு

சாட்சியா யிருக்கும்போது — சான்ருக விருக் குங் காலையில்,

பரமாத்மா என்றும் — பரமாத்மா எனவும்

அவஸ்தாத்திரய — இங்ஙனங் கூறிய மூன்றவஸ்தைகளுக்கும்

சாட்சியா யிருக்கும்போது — கரியாக விருக்குங் காலையில்

ஞானாத்மா என்றும் — ஞானாத்மா வெனவும்,

கூடஸ்தர் என்றும் — கூடஸ்த ரெனவும்,

சொல்லப்படும் — புகலப்படும். இவருக்குச் சீவாத்மா வென்று நாமம் வந்த தென்னையெனில், தப்தாய பிண்டம்போல நகசிகைபரியந்தம், சரீரத் திரயங்களிற் சம்பந்தித்து, அகம் என்னும் விருத்தியினால் ஜீவாத்ம பக்ஷமாயும், நிர்விகாரத்தினாற் பிரபஞ்சத்திற்குச் சாக்ஷியாயு மிருக்கின்றதனால், ஜீவாத்மா வென்று நாமம் வந்தது. இவருக்கு அந்தராத்மா என்று நாமம் வந்ததென்னையெனில். — கமல பத்தி ரோதகம்போல, சொற்பன விருத்தியிலொட்டியும், ஒட்டாமலு மிருக்கின்றபடியினால், அந்தராத்ம பக்ஷமாயும் நிருவிகாரத்தினால் மனோ விருத்திக்குச் சாக்ஷியாகவு மிருக்கின்றதனால், அந்தராத்மா வென்றும் நாமம் வந்தது. இவருக்குப் பரமாத்மா வென்று நாமம் வந்ததென்னையெனில், சாக்கிர விவகாரத்திற்குச் சூரியனானவன் க்ஷியாசா



யிருக்கின்றதுபோல, அந்தக்கரண வியாபார மில்லாத சுழுத்தியவஸ்தையை அறிந்துகொண் டிருக்கின்றபடியினால் பரமாத்ம பக்ஷமாயும், நிர்விகாரத்தினா லற்ப விஷயமாகத் தோற்றுகிற வானந்தத்திற்குச் சாக்ஷியாகவு மிருக்கின்றதனால் பரமாத்மா வென்று நாமம் வந்தது

இவருக்கு ஞானாத்மாவென்று நாமம் வந்த தென்னையெனில், பஞ்சகோசங்களையும், அவைகளுக்குச் சொல்லிய விவகாரங்களையு மறிந்து, அவைகளுக் கந்நியமா யிருக்கின்றபடியினால், ஞானாத்மா வென்று நாமம் வந்தது. இவரை யாத்மா வென்று சொல்லிய தென்னையெனில், நானென் றபிமானத்திற் கிடமாக, ஆன்மாவாகத் தோற்றி, புத்திர மித்திர களத்திர பூதாதிகள் வேறுவேறு பெயரை யடைந்து, தனக்குப் புறம்பாகத் தோற்றுகிறபடியினால் புறம்பாகாமல், கண்டேன் கேட்டேன் ஜீவித்தேன் சங்கற்பித்தேன் என்று தானாகத் தோற்றின சூட்சும சரீரமும், என் கண், என் காது, என் பிராணன், என் மனமென்று தனக்குப் புறம்புபட்டு நாமரூபந் தோற்றுகையாலும், இவைகட் கெல்லாம்

அப்பாற்பட்டு, நிர்விகார சைதன்னியமாக விருக்கின்ற இந்தப் பிரமமே தானாக விருக்கின்றபடியினுலும், இந்தப் பிரமம் தனக்குப் புறம்புபட்டு, நாம ரூபங் காணப்படாமல் தானாகவே சித்தித்திருக்கையாலும், இந்தப் பிரம சொரூபமாகிய நம்மை ஆன்மா வென்று சொல்லியது. இவரைக் கூடஸ்தரென்று கூறிய தென்னையெனில், கூடம் என்பது கொல்லன் உலையிற் கிடக்கின்ற அடைகல். அந்தக் கூடத்தை முன்னிட்டுக் கொண்டு, ஈட்டி வாள் முதலிய அய விவகாரங்களெல்லாம், தோன்றி யழிந்தும், அந்தக் கூடம் நிர்விகாரியாயிருக்கின்றது போல, நிருபாதிக சைதன்னியமாயிருக்கின்ற தன்னிடத்திற் சிவேஸ்வர ஜகத்துக்களாகிய முப்பத்தைந்து தத்துவங்களாய்த் தோன்றி யழிந்தும், தான் நிர்விகாரியா யிருக்கின்றபடியால் தன்னைக் கூடஸ்தனென்று கூறியது.

இப்படிச் சீவனுக்கு — இந்தப் பிரகாரம் சிதாபாசனுக்கு

மூன்று சரீரங்களும் — சரீரத்திரயங்களும்,



மூன்று அவஸ்தைகளும் — அவஸ்தாத்திரயங்களும்,

சொல்லப்பட்டன — பிரதிபாதிக்கப்பட்டன. இங்ஙனங் கூறிய துவம்பதத்திற்கு வாச்சிய லக்ஷியமாவது யாதென்னில் — ஸ்தூல சூட்சும காரண சரீரத் திரயமும், சாக்கிர சொற்பன சுழுத்தி யவஸ்தாத்திரயமும், விசுவதைஜத பிராக்ஞ அபிமானத் திரயமு மாகிய ஒன்பதும், இவைகளுடன் கூடி வியவகரிக்கின்ற ஜீவன் ஒன்றும் ஆகின்றபத்தும் வாச்சியார்த்தமாம். லக்ஷியார்த்தமாவது இவைகளுக்கு அதிஷ்டான சைதன்னியமா யிருக்கின்றஜீவசாக்ஷி.

இனி, ஈஸ்வரனுக்கு ஸ்தூல சரீரமாவது யாது? அந்த ஸ்தூல சரீரத்துடன் கூடி, சாக்கிராவஸ்தையைப் பொருந்துங்காலையில் அவனுக்கு அபிமான நாமம் யாது? இவற்றிற்கு அதிஷ்டான சைதன்னியம் யாதென்னில்? —

இனி, ஈஸ்வரனுக்கு மூன்று சரீரங்களும் — இனி, ஈஸ்வரனுக்குத் திரிவித தேகங்களும்,

மூன்று அவஸ்தையும் சொல்லும்படி — திரிவித அவஸ்தைகளும் சொல்லும்படி,

கற்பிதப் பிரபஞ்ச வடிவமாகத் தோற்றுகின்ற கானற் சலம்போல, — சகத்து மித்தையா சொரூப மாகத் தோற்றுநின்ற,

ஸ்தூல பஞ்ச பூதங்களும் — ஸ்தூல ஐம்பூதங் களும்,

அந்தப் பூதங்களிலே தோன்றின — அங்ஙனந் தூலபஞ்ச பூதங்களிலே யுண்டான

மூன்று சாதியாயிருக்கின்ற — திரிவித குலமாக விருக்கின்ற

தூல சரீர சமஷ்டியும் கூடி — தூல தேகங்க ளனைத்துஞ் சேர்ந்து,

ஈஸ்வர தூல சரீரமென்றும் — ஈஸ்வரனுடைய தூல தேக மென்றும்

விராட்டு என்றும் சொல்லப்படும் — விராட் டெனவும் பகரப்படும்.

இதனுடனே கூடி — இந்தச் சமஷ்டி ஸ்தூல சரீரத்துடனே சம்பந்தித்து,

சாக்கிராவஸ்தையை — பரசாக்கிராவஸ்தையை



பொருந்துகின்ற ஈஸ்வரன் — அடைகின்ற ஈஸ் வரனை

வைஸ்வானரனென்றும் — வைஸ்வானர னென வும்.

இந்த இருவகைக்கும் — இங்ஙனங் கூறிய இருவிதத்துக்கும்,

அதிஷ்டான சைதன்னியம் — ஆதாரக்ஞானம்

பிர்மா என்றும் சொல்லப்படும் — விரிஞ்ச னெனவுங் கூறப்படும். இந்த ஈஸ்வர ஸ்தூல சரீரத்தை விராட்டென்று கூறிய தென்னையெனில், பிருதுவியாதி யஷ்டமூர்த்த முதலிய நாநாவித மாய்த் தோன்றுகிறபடியினல் விராட்டென்று கூறியது. இவற்றுடன் கூடிய ஈஸ்வரனுக்கு வைஸ் வானர னென்று நாமம் வந்த தென்னையெனில், சமஸ்த பிராணிக ளிடத்திலும் நானென்று அபி மானஞ் செய்வதினல் வைசுவானர னென்று நாமம் வந்தது. இதற்கு அதிஷ்டான சைதன்னியம் பிரம னென்று கூறிய தென்னையெனில், சமஸ்த பிராணி களிடத்திலும் ஆதாரமாக விருந்து, அவர்கள் செய்த

சஞ்சித வினைகளையறிந்து, தேகாதி பிரபஞ்சங்களைச் சங்கற்பிக்கின்றபடியினால், பிரமனென்று கூறியது. இனி, ஈஸ்வரனுக்குச் சூட்சும சரீரமாவ தியாது? அந்தச் சூட்சும சரீரத்துடன் கூடி சொற்பனவஸ் தையை யடைகின்றபோது, அவருக்கு அபிமான நாமம் யாது? இதற்கு அதிஷ்டான சைதன்னியம் யாது? என்னில்:—

சூட்சும பூதங்கள் ஐந்தும் — சூட்சும பஞ்ச பூதங்களும்,

அந்த பூதங்களிலே தோன்றின — அந்தச் சூட்சும பஞ்ச பூதங்களிலே யுண்டான

சூட்சும சரீர சமஷ்டியுங் கூடி — சூட்சும சரீரங் கள் அனைத்துஞ் சேர்ந்து,

ஈஸ்வர சூட்சும சரீரம் என்றும் — ஈஸ்வரனு டைய சூட்சும தேகங்க ளென்றும்,

இரண்ணிய கற்பம் என்றும் — இரண்ணிய கற்பமெனவும்.

சொல்லப்படும் — உரைக்கப்படும்.



இதனுடனே கூடி — இந்தச் சமஷ்டி சூட்சும சரீரத்துடன் புணர்ந்து,

சொற்பன அவஸ்தையை — பர சொற்பன வஸ்தையை

பொருந்துகின்ற ஈஸ்வரன் — சம்பந்திக்கின்ற ஈஸ்வரனை

சூத்ராத்மா என்றும் — சூத்ராத்மா வெனவும்,

இந்த இருவகைக்கும் — இங்ஙனங் கூறிய இரு விதத்திற்கும்

அதிஷ்டான சைதன்னியம் — ஆதாரக்ஞானம்

விஷ்ணு என்றும் சொல்லப்படும் — திருமா லெனவும் இயம்பப்படும். இனி, ஈஸ்வர சூட்சும சரீரத்தை இரணிய கற்பமென்று சொல்லிய தென்னையெனில். — விகஸிதமாய்ப் பிரகாசிக்கின்ற சமஸ்தத்தையும் உதரத்துள் அடக்கியிருப்பதினாலும், ஞானசித்தி யுண்டா யிருப்பதினாலும், இரணிய கற்ப மென்று சொல்லியது. இவற்றுடனே கூடிய ஈஸ் வரனுக்கு சூத்ராத்மா என்று நாமம் வந்த தென்னை

யெனில். — நாநாவித மணிகளிடத்தும் சூத்திரங் கோர்க்கப்பட்டிருப்பதுபோல், நாநாவிதப் பிரபஞ்சங் களிலும், அநுசூதனை யிருந்து சூத்ரதாரியாய், அசைப்பிக்கின்றபடியினல் சூத்ராத்மாவென்று நாமம் வந்தது. இதற்கு அதிஷ்டான சைதன்னியம் விஷ்ணு வென்று சொல்லியதென்னையெனில், சமஸ்த பிராணிகளிடத்திலும் ஆதாரமாக விருந்து, அவர்கள் செய்த நல்வினை தீவினைகளையறிந்து, ஹிதாஹித மென்னும் போகங்களைக்கற்பிக்கின்றதினல், விஷ்ணு வென்று சொல்லியது.

இனி, ஈஸ்வரனுக்குக் காரணசரீர மாவது யாது? அந்தக் காரண சரீரத்துடன் கூடிச் சுழுத்தி யவஸ்தையைப் பொருந்தும்போது, அவருக்கு அபிமான நாமம் யாது? இதற்கு அதிஷ்டான சைதன்னியம் யாது? என்னில். —

இந்தத் தூல சூட்சுமம் இரண்டின் — இங்ஙனங் கூறிய ஈஸ்வரனுடைய விராட்டு, இரணிய கற்பமாகிய விரண்டு சரீரங்களுடைய

வாசனையுடனே கூடி யிருக்கின்ற — வாசனைகளுடனே பொருந்தி யிருக்கின்ற



மாயை ஈஸ்வர காரண சரீரம் என்றும் — மாயையை யீஸ்வர காரண சரீர மெனவும்

அவ்வியாகிருதமென்றுஞ் சொல்லப்படும் — அவ்வியாகிருத மெனவும் கூறப்படும்.

இதனுடனே கூடி — இந்தக் காரண சரீரத்துடனே பொருந்தி

சுழுத்தி அவஸ்தையை — பர சுழுத்தி யவஸ்தையை

பொருந்துகின்ற ஈஸ்வரன் — கூடுகின்ற ஈஸ்வரனை

அந்தரியாமி என்றும் — அந்தரியாமி யெனவும்,

இந்த இருவகைக்கும் — இங்ஙனங் கூறிய இருவிதத்துக்கும்,

அதிஷ்டானசைதன்னியம் — ஆதாரக்ஞானம்

உருத்திரன் என்றும் சொல்லப்படும் — பரனெனவும் புகலப்படும். இனி, ஈஸ்வரனுக்குக் காரண சரீரத்தை அவ்வியாகிருத மென்று கூறியதென்னையெனில், நாம ரூப ரகிதமா யிருக்கின்றபடியினல்,

அவ்வியா கிருதமென்று கூறியது. இவற்றுடன் கூடிய ஈஸ்வரனுக்கு அந்தரியாமி யென்று நாமம் வந்த தென்னையெனில். ஆகாயம்போலச் சமஸ்த பிராணிக ளிருதயத்திலு மிருந்து, பிரேரிப்பிக்கின்ற படியினால், அந்தரியாமியென்று நாமம் வந்தது. இதற்கு அதிஷ்டான சைதன்னியம் ருத்திரனென்று சொல்லிய தென்னையெனில்? — சமஸ்த பிராணி களிடத்திலும், ஆதாரமாக விருந்து, அவர்கள் பிராரத்தப்போகம் புசித்துத் தொலையுங்கால மறிந்து தநு கரண புவன போகங்கள் உற்பத்தியான வண்ணம் ஒடுங்குகின்றபடியினால், ருத்திரனென்று சொல்லியது. இங்ஙனங் கூறிய தற்பதத்திற்கு வாச்சி இலக்ஷியமாவ தியாதெனில், — விராட்டு இரணியகற்பம் அவ்வியாகிருதம் என்கிற சரீரத் திரயமும், சிருஷ்டி திதி சங்கார மென்கின்ற அவஸ்தாத் திரயமும், வைசுவானரன் சூத்திராத்மா அந்தரியாமி என்கின்ற அபிமானத் திரயமும், ஆகிய ஒன்பதும் இவைகளுடன் கூடிச் சிருஷ்டியாதி யைச் செய்யும், ஈஸ்வரனு மாகின்ற பத்தும் வாச்சி யார்த்தம். லக்ஷியார்த்தம் இவைகளுக்கு அதிஷ் டான சைதன்னியமா யிருக்கின்ற ஈஸ்வரசாக்ஷி



யாகிய பிரமமாம்

இங்ஙனங் கூறிய ஜீவேஸ்வரன் நானென்று கலந்து நிற்பதற்குத் தத்துவங்க ளெத்தனை? அந்த ஜீவேஸ்வரர்களுக்கு வியாபகம் எவ்வளவு? இவைகளுக் குச் சாக்ஷியா யிருக்கின்ற பிரம சைதன்னியத்திற்கு வியாபக மெவ்வளவு? என்னில் —

சீவன் — சிதாபாசனானவன்

தன் மூன்று அவஸ்தைகளிலும் — தன்னுடைய ஜீவ சாக்கிராதி அவஸ்தாத்திரயங்களிலும்,

தன் மூன்று சரீரங்களா யிருக்கின்ற — தன்னு டைய தூலாதி சரீரத் திரயங்களாக விருக்கின்ற,

இருபத்தேழு தத்துவங்களுடனும் — தத்துவங்க ளிருபத்தேழுடனும்,

நான் என்று கலந்து நிற்கின்றதுபோல — அவைகளை யானென்று, புணர்ந்திருப்பதற் கொப் பாய்,

ஈஸ்வரனும் — பரனும்,

தன் மூன்று அவஸ்தைகளிலும் — தன்னுடைய

பரசாக்கிராதி யவஸ்தாத்திரயங்களிலும்,

தன் மூன்று சரீரங்களா யிருக்கின்ற — தன்னுடைய வ்ராட்டாதி சரீரத்திரயங்களா யிருக்கின்ற

முப்பத்திரண்டு தத்துவங்களுடனும் — தத்துவங்கள் முப்பத்திரண்டுடனும்.

கலந்து நிற்பன் — புணர்ந்திருப்பன்

ஆகையினாலே — ஆனபடியினாலே

சீவசிதாபாசன் — சித்துத் தன்மையின்றியாபாசத் தன்மையுள்ள சிவனானவன்.

தன் சரீரமாத்திரமே கலந்துநிற்பன் — தன்னுடைய தேக மட்டிலும் புணர்ந்திருப்பன்.

ஈஸ்வரன் — பரனானவன்

தன் சரீரமாகிய — தன்னுடைய தேகங்களாகின்ற

சகல சரீரங்களோடும் — சமஷ்டி தேகங்களுடனும்,

சகல பிரபஞ்சங்களோடும் — சமஸ்த சகங்களோடும்,



கலந்து நிற்பன் புணர்ந்திருப்பன்.

இந்த இருவகைக்கும் — இங்ஙனங் கூறிய சீவேஸ்வர ரிருவருக்கும்

சாக்ஷியா யிருக்கின்ற — சான்றாக விருக்கின்ற

பிரமசைதன்னியமும்—பிரமஞானமும், சகல சரீரங்களிலும்—சமஷ்டி தேகங்களிலும்

சகல பிரபஞ்சங்களிலும் — சமஸ்த சகங்களிலும்

நிறைந்து -- பூரணமாகி

அப்பாலும் பத்துத் திக்கையும் — அவைகட்கப்பாற்பட்ட விடங்களிலும்,

அதிக்கிரமித்து எல்லையற்றிருகும் — அதிகரித்து வரம்பின்றி நிற்கும். இங்ஙனங் கூறிய சிதாபாசன், தூல சரீரத்துடன் கூடி விவகரிப்பதற்குச் சாதனாந்தரமான தத்துவங்க ளெத்தனையென்னில். —

சீவனுக்கு — சிதாபாசனுக்கு

ஸ்தூல சரீர வியவகாரத்திற்கு — ஸ்தூலதேகத்துடன் கூடி வியவகாரஞ் செய்வதற்கு

அன்னமயமான — அன்னமய மாகின்ற

சட்கோச தத்துவங்கள் ஆறு — சர்மம், உதிரம், மாமிசம், சநாயு, அஸ்தி, மச்சை என்னும் ஆறுகோசங்களாகிய தத்துவங்களாறும் ;

சூட்சுமசரீரதத்துவங்கள் இருபது — சூட்சும தேகங்களாகிய ஞானேந்திரிய பஞ்சகமும், பிராணாதி பஞ்சகமும், அந்தக்கரண பஞ்சகமும், கர்மேந்திரிய பஞ்சகமும் ஆகத் தத்துவங்க ளிருபதும் ;

ஜீவன், ஈஸ்வரன், அவித்தை, வித்தை, பிரமம் — 5 — சிதாபாசனும், பரனும், அஞ்ஞானமும், மாயையும், பிரமு மாகின்ற தத்துவங்கள் ஐந்தும் ;

ஆகத் தத்துவங்கள் 31 — ஆகத் தத்துவங்கள் முப்பத்தொன்றும். இந்தச் சிவன் சூட்சும சரீரத்துடன் கூடி விவகரிப்பதற்குச் சாதனாந்தரமான தத்துவங்க ளெத்தனையெனில் :—

சூட்சும சரீர வியவகாரத்திற்கு — சிதாபாசன் சூட்சுமதேகத்துடன் கூடி வியவகாரஞ் செய்வதற்கு,

சூட்சும சரீர தத்துவங்கள் இருபது — சூட்சும தேகமாகிய தத்துவங்க ளிருபது,



சிவன், ஈஸ்வரன், அவித்தை, வித்தை, பிரமம் — 5 — சிதாபாசனும், பரனும், அஞ்ஞானமும், மாயையும் சிவமும் ஆகிய தத்துவங்களைந்து,

ஆகத் தத்துவங்கள் இருபத்தைந்து — ஆகத் தத்துவங்க ளிருபத்தைந்து. இந்தச் சிதாபாசன் காரண சரீரத்துடன் கூடி வியவகரிப்பதற்குச் சாதனாந்தரமான தத்துவங்களெத்தனை யென்னில்,

காரண சரீர வியவகாரத்திற்கு — சிதாபாசன் காரண சரீரத்துடன் கூடித் தொழில் செய்வதற்கு,

சிவன், ஈஸ்வரன், அவித்தை, வித்தை, பிரமம் — 5 — உயிரும், அரனும், அஞ்ஞானமும், மாயையும், பரமும் ஆக ஐந்து. இந்தச் சிதாபாசன் சரீரத்திரயங்களை விட்டுத் தனியே வியவகப்பதற்குச் சாதனாந்தரமான தத்துவங்க ளெத்தனை யென்னில்.—

சீவ வியவகாரத்திற்கு — சீவனானவன் தனியேயிருந்து வியவகாரஞ் செய்வதற்குத் தத்துவங்கள்,

சிவன், ஈஸ்வரன், பிரமம் — 3 — சிதாபாசனும், பரனும், சிவமும் ஆகத் தத்துவங்கள் மூன்று.

அவஸ்தாத்திரய விலக்ஷணராயும், துரிய ஸ்வரூபராயு மிருக்கின்ற சாக்ஷி வியவகாரத்திற்குத் தத்துவங்க ளெத்தனை யென்னில்.—

சாக்ஷி வியவகாரத்திற்குச் சாக்ஷி — 1 — சீவ சாக்ஷியானது வியவகாரஞ் செய்வதற்கு நிர்விகாரி யா யிருக்கின்ற கூடஸ்தராகிய தத்துவம் ஒன்ரும்.

இனி, ஈஸ்வரன் தூல சரீரத்துடன் கூடி வியவ காரஞ் செய்வதற்குச் சாதனுந்தரமான தத்துவங்க ளெத்தனை யென்னில். —

ஈஸ்வரனுக்குத் தூலசரீர வியவகாரத்திற்கு — பரனுக்குத் தூல சரீரத்துடன் கூடி வியவகாரஞ் செய்வதற்கு,

சமஷ்டி அன்னமய கோச தத்துவங்கள் — 6 — சமஸ்த அன்னமயகோச தத்துவங்களாறு,

சமஷ்டி சூட்சும சரீர தத்துவங்கள் 20 — சமஸ்த சூட்சும தேக தத்துவங்க ளிருபது,

சமஷ்டி சீவன், அவித்தை, 2 — சமஸ்த சிதா பாசனும், அஞ்ஞானமு மாகிய தத்துவங்களிரண்டு,



ஈஸ்வரன், வித்தை பிரமம் 3 — பரனும், மாயையும், சிவமுமாகிய தத்துவங்கள் மூன்று,

தூல பூதங்கள் 5 — தூலபூதங்க ளைந்து,

ஆகத் தத்துவங்கள் 36 — ஆகத் தத்துவங் கள் முப்பத்தாறு

இந்த ஈஸ்வரன் சூட்சும சரீரத்துடன் கூடி வியவக ரிப்பதற்குச் சாதனுந்தரமான தத்துவங்க ளெத்தனை யென்னில் —

சூட்சும சரீர வியவகாரத்திற்கு — ஈஸ்வரன் சூட்சும சரீரத்துடன் கூடி வியவகாரஞ் செய்வதற்கு,

சமஷ்டி சூட்சும சரீர தத்துவங்கள் 20 — சமஸ்த சூட்சும தேக தத்துவங்க ளிருபது,

சமஷ்டி சீவன் அவித்தை 2 — சமஸ்த சிதா பாசனும் அஞ்ஞானமு மாகிய தத்துவங்க ளிரண்டு,

சூட்சும பூதங்கள் 5 — சூட்சும பூதங்க ளைந்து,

வித்தை, ஈஸ்வரன், பிரமம் 3 — மாயையும், பரனும், சிவமு மாகிய மூன்று,

ஆகத் தத்துவங்கள் 30 — ஆகத் தத்துவங்கள் முப்பதாம்.

இந்த ஈஸ்வரன் காரண சரீரத்துடன் கூடி வியவகரிப்பதற்குச் சாதனுந் தரமான தததுவங்களெத்தனை யென்னில். —

காரண சரீர வியவகாரத்திற்கு — ஈஸ்வரன் காரண தேகத்துடன் கூடி வியவகாரஞ் செய்வதற்கு

வித்தை, ஈஸ்வரன், பிரமம் 3 — மாயையும், பரனும், சிவமு மாகத் தத்துவங்கள் மூன்றும்.

இந்த ஈஸ்வரன் சரீரத்திரயங்களை விட்டுத் தனியே வியவகரிப்பதற்குச் சாதனுந்தரமான தத்துவங்க ளெத்தனை யென்னில். —

ஈஸ்வர வியவகாரத்திற்கு — இங்ஙனங் கூறிய பரனுனவன் வியவகாரஞ் செய்வற்கு,

ஈஸ்வரன் பிரமம் 2 — பரனும் சிவமுமாகத் தத்துவங்க ளிரண்டு,

இவைகளுக் கெல்லாம் அதிஷ்டான மாகவும், விலக்ஷணமாகவும், சாக்ஷியாகவு மிருக்கின்ற பிரம்ம



வியவகரிப்பதற்குத் தத்துவங்க ளெத்தனை யென்னில். —

பிரம வியவகாரத்திற்கு — இங்ஙனங் கூறிய பிரம ஸ்வரூபம் வியவகாரஞ் செய்வதற்கு,

பிரமம் 1 — சிவம் ஒன்றும்.

இந்திரியங்கள் தனியே வியவகரிப்பதற்குச் சாதனுந்தரமான தத்துவங்க ளெத்தனை யென்னில் —

இந்திரிய வியவகாரத்திற்கு — இந்திரியங்கள் வியவகாரஞ் செய்வதற்கு

இந்திரியம் 1 — இந்திரிய மொன்று,

சட்கோச தத்துவங்கள் — 6 சட்கோச தத்துவங்க ளாறு,

அந்தக்கரணம் 5 — தேஜஸு முதலிய அந்தக் கரணங்களைந்து,

வாயு 5 — பிராணுதி வாயுக்க ளைந்து,

சிவன், ஈஸ்வரன், அவித்தை, வித்தை, பிரமம் 5 — சிதாபாசனும், பரனும், அஞ்ஞானமும், மாயையும், சிவமு மாகிய ஐந்து,

ஆகத் தத்துவங்கள் 22 — ஆகத் தத்துவங்க ளிருபத் திரண்டாம்.

மனோ ராஜ்ஜிய வியவகாரஞ் செய்வதற்குத் தத் துவங்க ளெத்தனை யென்னில். —

மனோ ராஜ்ஜிய வியவகாரத்திற்கு — மனோவாசன வியவகாரஞ் செய்வதற்கு

அந்தக்கரணம் 5 — உள்ள முதலிய அகக் கரணம் ஐந்து,

சீவன், ஈஸ்வரன், அவித்தை, வித்தை, பிரமம் 5 — சிதாபாசனும், பரனும், அஞ்ஞானமும், மாயையும், சிவமு மாகிய ஐந்து,

ஆகத் தத்துவங்கள் 10 — ஆகத் தத்துவங்கள் பத்தாம் இப்படி விந்து தத்துவ முதல் பிருதிவி தத்துவ மீருக, இந்தப் பிரகாரம்,

தத்துவங்களினுடைய — கருவிகளினுடைய

தோற்றமும் நிலையும் சொல்லப்பட்டன. — உற் பத்தியுங் குணமும் பிரதிபாதிக்கப்பட்டன.

இனி, தத்துவங்கள் — இனிக் கருவிகரணாதிகள்



ஒடுங்குகின்ற வழி — பூர்வம் உற்பத்தியான பிரகாரமே அடங்குகின்ற மார்க்கம்,

சொல்லுகின்றோம் — கூறுகின்றோம்,

சகல சீவரிடத்திலு மிருக்கின்ற — சமஷ்டி சிதா பாசரிடத்திலு மிராநின்ற

தூல சரீரங்கள் அனைத்தும் — சமஷ்டி தூல தேகங்களும்,

தமக்கு ஆதாரமான — தங்களுக்கு இடமா கின்ற

தூல பூதங்களிலே மடிந்து — ஸ்தூல பஞ்ச பூதங் களினிடமாய் நெகிழ்ந்து.

பூதமாத்திரமாக ஒடுங்கும் — ஸ்தூல பஞ்ச பூத மாத்திரமாக அடங்கியிருக்கும்.

இந்தத் தூலபூதங்களும் — இங்ஙனங் கூறிய ஸ்தூல பஞ்ச பூதங்களும்,

பஞ்சீகரணம் விட்டு — பூர்வம் பஞ்சீகரணமான தன்மையை விடுத்து,

தன் மாத்திரைகளான — பஞ்ச தன்மாத்திரை

களாகிய

தமோகுண பூதங்களாக மிஞ்சும் — தமோ குணும்ச சூட்சும பஞ்ச பூதங்களாகச் சேஷித்து நிற்கும்.

அப்போது கேவல — அக்காலேயில் சூட்சும மாத்திரமான

இரண்ய கர்ப்பாவஸ்தை யென்று — இரணிய கர்ப்பாவஸ்தையென

சொல்லப்படும் — பிரதிபாதிக்கப்படும்.

சூட்சும சரீர தத்துவங்க ளிருபதும், — இலிங்க தேக தத்துவங்க ளிருபதும்,

கட்டுவிட்டு — உடைந்து

பூதங்களினுடைய — அந்தப் பஞ்ச தன் மாத்தி ரைகளி னுடைய

சத்துவ குணமும் — சாத்விக குணமும்

ரஜோ குணமும் ஆக ஒடுங்கும் — இராஜ தகுணமு மாக அடங்கி யிருக்கும்,



அஃது எங்ஙனம் எனில் — அஃது எப்படி யென்ருல்,

சகல பிராணிகள் இடத்திலும் — சமஷ்டி சீவர்க ளிடத்திலும்,

இருக்கின்ற — இராநின்ற

அகங்காரமும், கிராணேந்திரியமும், உதானவா யும், உபஸ்தேந்திரியமும் — அகம்பாவமும், ஆக்கிரா ணேந்திரியமும், உதான பவனமும், உபஸ்தேந்தி ரியமும்,

பிருவியில் ஒடுங்கும் — மிருத்திகையி லடங்கும்,

சித்தமும், சிங்குவையும், சமானனும், பாயுருவும் — சிந்தையும், சிங்குவேந்திரியமும், சமான வாத மும், பாயுரு விந்திரியமும்,

அப்புவில் ஒடுங்கும் — சலத்தி லடங்கும்.

புத்தியும், சட்சுவும், அபானனும், பாதமும் — மதி யும், சட்சுவிந்திரியமும், அபான பவனமும், பாதேந் திரியமும்

அக்கினியில் ஒடுங்கும் — தேயுவி லடங்கும்.

மனதும், தொக்கும், பிராணனும், பாணியும் — மானதமும், தொக்கிந்திரியமும், பிராணபவன மும், பாணீந்தியமும,

வாயுவில் ஒடுங்கும் — வளியில் அடங்கும்.

உள்ளமும், சுரோத்திரமும், வியானனும், வாக் கும் — தேஜஸமும், சுரோத்திரேந்திரியமும், வியான வாதமும், வாக்கிந்திரியமும்

ஆகாசத்தில் ஒடுங்கும் — வெளியி லடங்கும்.

அப்போது — அக்காலையில்,

பழயபடியே முக்குண பூதங்கள் ஆகும் — பூர்வ மிருந்த பிரகாரமே திரிவிதகுண பூதங்களாகும்.

இந்தச் சூட்சும பூதங்களுள் — இங்ஙனங் கூறிய சூட்சும பஞ்ச பூதங்களுக்குள்,

பிருதுவி அப்புவில் கரைந்து ஒடுங்கும் — மிருத் திகை சலத்தில் நெகிழ்ந்து அடங்கும்.

அப்புவும் அக்கினியில் சுவரி ஒடுங்கும் — அந்தச் சலமும் அங்கியில் வற்றி யடங்கும்.

அக்கினியும் விளக்குப்போல வாயுவில் அணைந்து



ஒடுங்கும் — அந்த அங்கியும், காற்றின் முகத்தில் வைத்த தீபம்போல வளியிலவிந்தடங்கும்.

வாயுவும் ஆகாயத்திலே ஓய்ந்து ஒடுங்கும் — அந்த வளியும் வெளியி லொழிந்தடங்கும்.

அந்த ஆகாசமும், விக்ஷேப சத்தியில் ஒடுங்கும் — அந்த வெளியும் தோற்ற மென்னுஞ் சத்தியி லடங்கும்.

ஆவணர சத்தியும் — மறைப்பென்னுஞ் சத்தியும்,

விக்ஷேப சத்தியும் — நினைப்பென்னுஞ் சத்தியும்,

மூலப் பிரகிருதியின் — காரணமான பிரதானத் தினது

தமோகுண மாத்திரமாய் — தாமதகுண மாத் திரமாக,

ஆல மரம் — வட விருக்ஷம்

ஆலம் விதையில் — அந்த விருக்ஷத்தின் வித் தில்,

ஒடுங்கிறைற்போல — அடங்கி யிருப்பதற் கொப் பாய்,

இன்னும் ஒரு சிருஷ்டிக்கு வித்தாக — பின்னும் ஒரு படைப்புக்கு விதையாக

மாயையிலும் அவித்தையிலும் — வித்தை யினிடமாகவும் அஞ்ஞானத்தி னிடமாகவும்,

ஒடுங்கும் — அடங்கும்.

இந்த மாயையும் அவித்தையும் — இங்ஙனங் கூறிய வித்தையும் அஞ்ஞானமும்

அதி நுண்மையான — மிகநேர்மையான

மூலப் பிரகிருதி என்று சொல்லப்பட்ட — காரணமான பிரதான மென்று கூறுநின்ற

விந்து தத்துவத்தில் ஒடுங்கும் — விந்து தத்துவத்தி னிடமா யடங்கும்.

அந்த விந்துவும் — அங்ஙனங் கூறிய விந்து தத்துவமும்,

பாம்பு என்கின்ற பெயர்போய் — சர்ப்பம் என்கிற நாமம் நீங்கி,

பழுதையாய்க் கண்டாற் போல — கயிறுகப் பார்த்ததற் கொப்பாய்,



தனக்கு அதிஷ்டான சைதன்னியமான — தனக்கு ஆதாரக்ஞானமான

பிரம சைதன்னிய மாத்திரமாக ஒடுங்கும் — பிரமக்ஞான மாத்திரமாக அடங்கும்.

இப்படி பொய் எல்லாம் — இங்ஙனங் கூறிய வண்ணம் மித்தை யெல்லாம்,

மெய்ப் பொருள் ஒன்ருகக் கண்டு — உண்மையான கேவல சைதன்னிய மாத்திரமாக வறிந்து

அதுவே சுபாவ சித்தமாய் — அந்தக் கேவல சைதன்னியமே சுபாவ உண்மையாய்

நிசமாக இருக்கின்ற — உண்மையாக இருக்கின்ற

தன்வடிவு எனக் கண்டு — தனது ஸ்வரூபமெனப் பார்த்து,

தெளிந்து கவலை கெட்டிருக்கின்றவனே — அறிந்து அச்சமற்றிருக்கின்றவனே,

சீவன் முத்தன் — பந்தம் விடுபட்ட நித்தியனும்.

இப்படி — இந்தப்பிரகாரம்

தத்துவங்களின் ஒடுக்கஞ் சொல்லப்பட்டது — ஆரோபமாகத் தோன்றின தத்துவங்களினுடைய அபவாதங் கூறப்பட்டது.

இப்படித் தோற்றி — இந்தப் பிராகார முண்டாகி

ஒடுங்குகின்ற தத்துவங்கள் 36 — அடங்கின தத்துவங்கள் முப்பத் தாறும்.

அவையாவன — அந்தத் தத்துவங்களாவன,

பூதங்கள் 5 — பூதம் ஐந்து,

ஸ்தூல சரீரதத்துவங்கள் 6 — சட்கோசதத்து வங்கள் ஆறு.

சூட்சும சரீர தத்துவங்கள் 20 — இலிங்க தேக தத்துவ மிருபது,

காரண சரீரமான, மாயை அவித்தை 2 — காரண தேகங்க ளாகிய மாயை அஞ்ஞானம் இரண்டு

இவற்றில் பிரதிபிம்பித்த — இங்ஙனங் கூறிய மாயையினிடமாகவும், அஞ்ஞானத்தி னிடமாகவும் பிரதிபலன மான,



சிவன், ஈஸ்வரன் 2 — சிதாபாசன், பரன் இரண்டு,

இவைகட்கு எல்லாம் — இங்ஙனங் கூறிய தத்துவங்க ளனைத்திற்கும்.

அதிஷ்டான சைதன்னியமா யிருக்கின்ற — ஆதார பிரமமாக இராநின்ற

பிரமம் ஒன்று — சிவம் ஒன்று (ஆகிய)

இவையாம் — இந்த முப்பத்தாறு தத்துவங்களாம்.

இவைகளில் — இங்ஙனங் கூறிய தத்துவங்கள் முப்பத்தாறில்,

பூதங்கள் 5 — பூதங்க ளைந்து,

மாயை 1 — வித்தை ஒன்று,

மாயாபிரதிபிம்பரான — மாயையிற் பிரதி பலன மானவ ரான

ஈஸ்வரன் 1 — பரன் ஒன்று,

பிரமம் 1 — சிவம் ஒன்று,

ஆக இந்த எட்டும் — ஆகின்ற இந்தத் தத்துவங்க ளெட்டும்,

சகல பிராணிகளுக்கும் — சமஷ்டி சிதாபாசர் களுக்கும்

சமுதாயமாக — பொதுவாக

அநுபவிக்கப்படும் — அநுபோகஞ் செய்யப்படும்.

மற்றை இருபத்தெட்டும் — ஏனைய இருபத் தெட்டுத் தத்துவங்களும்,

அவனவனுக்கு — ஒவ்வொரு சீவனுக்கு

பிருதக்காக அநுபவிக்கப்படும் — தனித்தனியாக அநுபோகஞ் செய்யட படும்.

அஃது எங்ஙனம் எனில் — அவர்களெப்படி பொதுவாக அனுபவிப்பார்க ளென்ருல்,

பிருதுவி தத்துவம் ஒன்று இறக்கில் — குற்றி யென்பது ஒன்றில்லா விட்டால்,

எல்லாருக்கும் ஆதாரம் இல்லை — சகல பிராணி களுக்கும் நிலையில்லையாம்.



மழை மறுக்கில் — அப்பு இல்லாவிடின்

எல்லாருக்குஞ் சலம் இல்லை — சமஷ்டி சீவர் களுக்கும் புன லில்லை.

தேயு இல்லாது இருந்தால் — அக்கினி நசிக் கின்,

பாகம் இல்லை — அன்ன பானுதிகளைப் பாகஞ் செய்வதற்கு ஏதுவின்ருகும்.

வாடை தென்றல் இல்லாவிட்டால் — வாடையுந் தென்றலு மில்லாவிடின்

வாயு இயக்கம் இல்லை — வாயுவின் சலனமில்லை.

ஆகாசம் இறக்கில் — வெளி இல்லாவிடின்

ஒருவருக்கும் அவகாசம் இல்லை — ஒரு சீவருக் கும் இட மின்ருகும்.

மாயையும் — வித்தையும்

மாயாப் பிரதிபிம்பரும் — மாயையிற் பிரதிபலன மான ஈஸ்வரனும்,

இறக்கில் — இல்லாதிருக்கில்

சகல சமயங்களுக்கும் — சமஸ்த மதங்களுக்கும்

தெய்வம் இல்லை — கடவுள் இன்றாகும்.

பிரமம் இல்லையேல் — பிரம மில்லாதிருக்கின்

ஒருவருக்கும் அறிவில்லை — ஒரு பிராணிக்கேனும் உணர்வின்றாகும்.

ஆகையால் இந்த எட்டும் — ஆதலால், இங்ஙனங் கூறிய தத்துவங்க ளெட்டும்,

எல்லாருக்கும் சமுதாயமாம் — சமஷ்டி சீவருக்கும் பொதுப்பட அநுபவிக்கப்படுகின்றவைகளாம்

பிருதக் கெங்ஙனமெனில் — அவனவனுக்கு வேறுவேறாக அனுபவிப்பது எவ்வண்ண மென்றால்,

ஒருவனுக்கு ஸ்தூலசரீரம் இறக்கில் — ஒரு புருஷனுக்குச் சட்கோச தத்துவம் நசிக்கில்

எல்லாருக்கும் — ஏனைய சீவருக் கெல்லாம்,

தூல சரீரம் இறவாதபடியினாலும் — ஸ்தூல தேகம் நசியாதபடியினாலும்,

சூட்சும சரீரத்தில் — லிங்கதேகத்தில்



ஒருவனுக்கு அங்க வைகல்லியம் வந்தால் — ஒரு புருஷனுக்கு அவயவக் குறைவு உண்டானால்,

எல்லாருக்கும் வாராதபடியினாலும் — ஏனைய சீவருக் கெல்லாம் உண்டாகாதபடியினாலும்,

முத்தரா யிருந்த — பந்தம் விடுபட்ட நித்தியரா யிராநின்ற

சுகர் வாமதேவர் முதலான பேருக்கும் — சுகர் வாமதேவர் முதலான மெய்ஞ்ஞானிகளுக்கும்,

அவித்தையும் சீவனும் இறந்துபோ யிருக்க — அஞ்ஞானமும் சிதாபாசனும் நசித்துப்போ யிருக்க,

மற்ற பேருக்கெல்லாம் — ஏனைய சீவருக் கெல்லாம்.

அவித்தையும் சீவனும் இறவாதபடியினாலும் — அஞ்ஞானமும் சிதாபாசனும் நசியாத படியினாலும்,

இந்த இருபத்தெட்டுத் தத்துவங்களும் — இங்ஙனங் கூறிய தத்துவங்கள் இருபத்தெட்டும்

அவனவனுக்கு — ஒவ்வொரு சீவனுக்கு

பிருதக்கு என்பதிலே — பிரத்தியேக மென்பதிலே,

சந்தேகமே யில்லை — ஐய மின்றும்.

இந்தத் தத்துவங்கள் முப்பத்தாறில் இங்ஙனங் கூறிய முப்பத்தாறு தத்துவங்களில்,

எப்போதும் தானுகவே — எப்பொழுதுஞ் சுயமாகவே

காணப்படுகிற தத்துவம் ஒன்று — பிரகாசிக்கிற தத்துவம் ஒன்று.

எப்போதும் தனக்கு அந்நியமாக — எக்காலமும் சுயம்பிரகாசமாக விளங்குகிற பிரமத்திற்குப் புறம்பாக

காணப்படுகிற தத்துவங்கள் ஏழு — அறியப்படுகிற தத்துவங்களேழு.

தானுகவும் — அவைகளைத் தானுகவும்

தனக்கு அந்நியமாகவும் — சுயம்பிரகாசமாகிய பிரமத்திற்குப் புறம்பாகவும்

அநுபவிக்கப்படுகிற தத்துவங்கள் இருபத்தெட்டு



— அநுபவஞ் செய்யப்படுகிற தத்துவங்க ளிருபத்தெட்டு.

அஃதெங்ஙன மெனில் — அவைக ளநுபவிக்கப் படுகின்ற தெவ்வண்ண மென்ருல்,

அவஸ்தாத்திரய — சாக்கிர சொற்பன சுழுத்தியென்கின்ற மூன்றவஸ்தைக்கு

சாக்ஷியா யிருக்கின்ற — சான்ருக விருக்கின்ற

பிரம சைதன்னியம் — பிரமக்ஞானம்,

எல்லா அவஸ்தைகளிலும் — அவஸ்தைகளனைத்திலும்

தானுக விளங்குகையி னுலும் — சுயமாகப் பிரகாசித்தலானும்,

மற்றத் தத்துவங்கள்போல — ஏனைய தத்துவங்களைப்போல

தனக்கு அந்நியமாக — பிரமத்திற்குப் புறம்பாக

விளங்காதபடியினுலும் — உணரக் கூடாமையாலும்,

அந்தப் பிரம சைதன்னியம் — அந்தக் கேவல பிரமசைதன்னியம்

ஒன்றுமே தானுக — ஒன்றுமே சுயம்பிரகாசமாக

அறியப்படுகிறது — காணப்படுகிறது.

பஞ்ச பூதங்கள் — ஐம்பூதங்கள்

மாயை — வித்தை

மாயாப் பிரதிபிம்பர் — மாயையிற் பிரதிபலனமான ஈஸ்வரன்

ஆக ஏழும் — ஆகின்ற ஏழு தத்துவங்களும்

தன்தன் தொழிலான — அதனதன் விவகாரங்களாகிய

வெட்டு, கொத்து, உழவு — வெட்டுதல், கொத்துதல், உழுதல்

பஞ்சகிருத்தியம் — சிருஷ்டி, திதி, சம்ஹாரம், துரோபவம், அநுக்கிரகமு மாகிய பஞ்ச கிருத்தியம்

தசாவதாரம் — மச்சம், கூர்மம், வராகம்,



நரசிங்கம், வாமனம், பரசுராமன். இராமன், பலபத்திரன், கண்ணன், கற்கி முதலிய பத்து அவதாரங்கள்

முதலானவை — முதலியவைகள்

ஒருகாலும் — காலத்திரயங்களினும்

தன்னுடைய தொழிலாக — தன்னுடைய வியவகாரமாக

காணப்படாதபடியினுலே — அறியப்படாதபடியினுலே

தனக்கு அந்நியங்களே அல்லாமல் — சுயம்பிரகாசமாகிய தனக்கு அந்நியமே யல்லாமல்,

தானுக மாட்டா — ஆத்மாவாக மாட்டாது.

மற்றை இருபத்தெட்டுத் தத்துவங்களுள்ளே — ஏனைய தத்துவங்க ளிருபத்தெட்டினுள்ளே

நான் பிராமணன் — நான் பார்ப்பான்

நான் க்ஷத்திரியன் — நான் அரசன்

நான் வைசியன் — நான் வணிகள்

நான் சூத்திரன் — நான் சதுர்த்தன்

நான் பிரமசாரி — நான் பிரமசரியன்

நான் கிரகஸ்தன் — நான் சம்சாரி

நான் வானப் பிரஸ்தன் — நான் வனத்தில் வாசஞ்செய்பவன்

நான் சன்னியாசி — நான் எதி

நான் ஆண் — நான் புமான்

நான் பெண் — நான் ஸ்திரீ

நான் கருவல், சிவலை — நான் கருத்தவன், சிவத்தவன்,

கட்டையன் நெட்டையன் — நான் குட்டையன், நெட்டையன்,

நான் பருத்தேன், இளைத்தேன் என்று — நான் ஸ்தூலித்தேன் வற்றிப்போனே னென்று

தானுக வழங்குகிற — ஆத்மாவாக வழங்கப் படுகிற



தூல சரீர தத்துவங்கள் ஆறும் — சட்கோச தத்துவங்க ளாறும்

மற்றெரு வேளையிலே — வேறெரு சமயத்திலே

தனக்குப் புறம்புபட்டு — தனக் கந்நியமாக

என் மாடு என் கன்று — எனது மாடு எனது கன்று

என்றூற் போல — என்று ஒரு புருடனுக்குப் புறம்பாகக் கூறுவதற் கொப்பாய்,

என் சரீரம் பருத்தது — எனது உடல் ஸ்தூலித்தது

இளைத்தது — எனது உடம்பு வற்றிப்போனது,

நரைத்தது — எனது கேசம் வெளுத்தது,

என் சரீரம் பிறந்து — எனது தேகம் உண்டாகி

இத்தனை நாள் ஆயிற்றுஎன்று — இவ்வளவு காலங் கழிந்த தென்று,

தான் வேறு தூல சரீரம் வேருக — ஆத்மா வேறு ஸ்தூல தேக மந்நியமாக

வழங்குகிறபடியினுலும் — சொல்லப்படுகின்ற படியினுலும்,

நான் கண்டேன் — நான் பார்த்தேன்,

கேட்டேன் — நான் கேள்வியுற்றேன்,

தொட்டேன் — நான் தீண்டினேன்,

போகித்தேன் — நான் அநுபவித்தேன்,

கொடுத்தேன் — நான் ஈந்தேன்,

வாங்கினேன் — நான் ஏற்றேன்,

நடந்தேன் — நான் சென்றேன்,

புசித்தேன் — நான் உண்டேன்,

சிந்தித்தேன் — நான் நினைத்தேன்,

நிச்சயித்தேன் — நான் தேறினேன்

இந்தப் பஞ்சத்திற்கு — இப்போது வந்த கருப்புக்கு

ஜீவித்தேன் என்று — ஜீவனஞ் செய்தேனென்று,



தானுக வழங்குகிற — ஆத்தமாவாக வழங்குகிற

சூட்சும சரீர தத்துவங்கள் இருபதும் — இலிங்க தேக தத்துவங்களிருபதும்,

மற்றொரு வேளையிலே — வேறொரு சமயத்திலே,

தனக்குப் புறம்புபட்டு — தனக்கு அந்நியமாக

என் வீடு என் உடமை யென்றாற் போல — எனது மனை எனது ஆஸ்திக ளென்று ஒரு புருடனுக்கு அந்நியமாகக் கூறப்படுவதற் கொப்பாய்,

என் கண் என் காது என் மூக்கு — எனது சட்சு எனது சுரோத்திரம், எனது ஆக்கிராணம்,

என் நாக்கு என் கை என் பாதம் — எனது சிங்நுவை, எனது பாணி, எனது கால்,

என் மனம் என் புத்தி என் அகங்காரம் என் சித்தம் — எனது மனம், எனது மதி, எனது அகம்பாவம், எனது சிந்தை,

என் பிராணன் என்று — எனது பிராண வாயு என்பதாக,

தான் வேறு அவைகள் வேருக — ஆத்மா வேறு மேற் சொல்லியவை வேருக,

வழங்குகிறபடியினுலும் — கூறப்படுகின்றதனுலும்

நான் அறியேன் அறிவே னென்று — நான் உணர்கிலேன் நான் உணர்வே னென்பதாகவும்,

தாஞக வழங்குகிற — ஆத்மாவாக வழங்குகிற

அஞ்ஞானமும் — அவித்தையும்,

சிதாபாசனும் — ஜீவனும்,

மற்ருெருவேளையிலே — வேருெரு சமயத்தில்

தனக்குப் புறம்புபட்டு — பிரமத்திற் கந்நியமாக,

என் அஞ்ஞானம் — எனது அவித்தை

என் சீவன் என்று — எனது சிதாபாச னென்பதாக

வழங்கக் கண்டபடியினுலும் — பிரதி பாதிக்கக் கண்டபடியினுலும்,

இந்த இருபத்தெட்டு தத்துவங்களும் — இங்ஙனங் கூறிய தத்துவங்க ளிருபத்தெட்டும்,



தான் ஆகவும் — ஆத்மாவாகவும்,

தக்னகு அந்நியமாகவும் — சிற் சொரூபமாக விருக்கின்ற பிரமத்திற்குப் புறம்பாகவும்,

வழங்குகின்றது சித்தம் — அநுபவிக்கப்படுகின்றதுண்மை.

இப்படிச் சொன்ன — இந்தப் பிரகாரம் உபதேசித்த

குருவைப் பார்த்து — ஆசிரியரை நோக்கி

சிஷன் கேட்கும்படி — மாணுக்கன் விஞவும்படி,

இந்த இருபத்தெட்டு தத்துவங்களும் தானுனல் — இங்ஙனங் கூறிய தத்துவங்க ளிருபத் தெட்டும் ஆத்மாவாக விருக்குமானுல்,

சாக்ஷியைப் போல — சைதன்னியத்திற் கொப்பாய்,

ஒரு தன்மையாக — ஒரு படித்தாக

தோற்றவேண்டுமே யல்லாமல் — தோன்ற வேண்டுமே யன்றி

பஞ்ச பூதங்களைப் போல — ஐம்பூதங்களைப்போல

தனக்கு அந்நியமாக — ஆத்மாவிற்குப் புறம்பாக

காணக் கணக்கில்லை — வழங்கத் தேவை யில்லை,

இந்த இருபத்தெட்டும் — இங்ஙனங் கூறிய தத்துவங்கள் இருபத்தெட்டும்

தனக்கு அந்நியமே யானால் — கூடஸ்தருக்குப் புறம்பாக விருக்குமானால்

எப்போதும் — காலத் திரயத்தினும்

புறம்புபட்டே — அந்நிய மாகவே

இருக்கவேணடுமே யல்லாமல் — வழங்கவேண்டுமே யல்லாமல்,

தானாக வழங்கக் கணக்கில்லை — ஆத்மாவாகப் பிரதிபாதிக்கத் தேவையில்லை.

தானுமாய் — ஆத்மாவுமாய்,

தனக்கு அந்நியமுமாய் — தனக்குப் புறம்பாகவுமாய்



இருக்கும் என்கிறது — பிரதிபாதிக்கப்படுமென்று சொல்வது.

இருட்டு ஆதித்தன் என்றாற் போலும் — அந்தகாரமும் சூரியனும் ஒன்றா யிருக்கின்ற தென்று சொல்வதற்கொப்பாய்,

வேளாள தீக்ஷதன் என்றாற்போலும் — வேளாளனும் பிராமணனும் ஒன்றாக விருக்கின்றானென்று சொல்வதற் கொப்பாய்;

விருத்தமாம் என்னும் சங்கைக்கு — விரோதமாம் என்கிற கேள்விக்கு,

பரமார்த்தமாக — யதார்த்தமாக

தான் என்கின்றது — ஆத்மா வென்கின்றது

ஒருவகையும் — ஒரு கூறுபாடும்,

அத்தியாசத்தினாலே — மித்தையினாலே

தான் என்கின்றது — ஆத்மாவென்கின்றது

ஒருவகையும் — ஒரு வகுப்பும்

ஆக இருவகையும் உண்டு — ஆகஇரண்டு வகையான கூறுபாடுகள் உள.

சாக்ஷி சைதன்னியத்தை — அவஸ்தாத்திரயத்திலும் சான்ருகவிருந்து அறிகின்ற அறிவை,

தான் என்கின்றது — ஆத்மா வென்கின்றது

பரமார்த்தம் அல்லாமல் — உண்மையே யன்றி,

உபசாரம் அல்ல — முகம னன்று.

தனக்கு அந்நியமாக இருக்கின்ற — கூடஸ்தனுக்குப் புறம்பாக விருக்கின்ற

இந்த இருபத்தெட்டையும் — இங்ஙனங் கூறிய இருபத்தெட்டு தத்துவங்களையும்,

தான் என்கின்றது — ஆத்மா வென்று சொல்வது,

கட்டையை கள்ளன் என்ருற்போலும் — குற்றியை மகனென்ருற் போலும்,

பழுதையை பாம்பு என்ருற் போலும் — கயிற்றை அரவு என்ருற் போலும்,



புத்திர தாராதிகளை — பிள்ளை பெண்சாதிகளை

தான் என்ருற் போலும் -- ஆத்மா வென்ருற் போலும்,

மயக்கமே யல்லாமல் — உன்மத்தமே யல்லாமல்

உண்மையல்ல — சத்தியமல்ல.

ஆகையினல் அஞ்ஞான காலம் தொடங்கி — ஆதலால், அறிவில்லாத கால முதலாக

தான் அல்ல என்று — ஆத்மா அன்றென்று,

காணப்பட்ட தத்துவங்கள் — 7 — உணராநின்ற தத்துவங்க ளேழு.

இப்போது இப்படிக் கொத்த — இப்பொழுது இத்தன்மையான

விவேகம் பண்ணின பிற்பாடு — பகுத்தறிவு உண்டான பிறகு

தான் அல்ல என்று — ஆத்மா அன்றென்று

காணப்பட்ட தத்துவங்கள் 28 — உணரப்படுகிற தத்துவங்க ளிருபத்தெட்டு

ஆக இந்த முப்பத்தைந்து தத்துவங்களையும் — ஆகின்ற இந்தத் தத்துவங்கள் முப்பத்தைந்தையும்,

அததற்குச் சொன்ன — அந்தந்த தத்துவங்களுக்குச் சொன்ன

குணம் குறியுடனே — பண்பு அடையாளங்களுடனே

கூடக் காண்கின்ற — சேர வுணர்கின்ற்

அறிவானது — ஆத்மாவானது,

கடத்தைப் பார்க்கின்றவன் — விஷயத்தையறிகின்றவன்

கடத்திற்குப் புறம்பாகவே இருந்து — கடத்திற்கு அந்நியமாகவே யிருந்து

கடத்தைப் பார்க்கின்றதுபோல — விஷயத்தையறிகின்றது போல,

அவைகட்கு அந்நியமாகவே யிருந்து — அந்தக் கடத்திற்குப் புறம்பாகவே யிருந்து,

அவைகளை அறிகின்றது என்றும் — அந்த முப்துபத்தைந் தத்துவங்களையும் உணர்கின்றதெனவும்,



முப்பத்தாருந் தத்துவமாகிய — முப்பத்தாருந் தத்துவமாகிய

அதுவே தான் என்றும் — அந்தப் பிரமமேதான் எனவும்,

அதுவே பரம சிவம் என்றும் — அந்ததானே பிர்மமெனவும்

கலக்கமறத் தெளிந்தவனே — அச்சமற ஆராய்ந்தறிந்தவனே,

சிவ தரிசனம் உடைய — பிரம தரிசன முடைய

சீவன் முத்தன் என்று — பந்தம் விடுபட்ட நித்தியனென்று

சொல்லப்படுவன் என்று உத்தரம் — கூறப்படுவன் என்று விடை கூறினதாம்.

இப்படி பிரமமே தான் என்றும் — இங்ஙனங் கூறிய பிரமமே தானெனவும்,

மற்றயை முப்பத்தைந்து தத்துவங்களும் — மற்றத் தத்துவங்கள் முப்பத்தைந்தும்,

தமக்கு அந்நியம் என்றும் — பிரமத்துக்கு வேறெனவும்,

பிரித்து அறியாத அவிவேகிகள் — பகுத்துணராத விவேக மில்லாதவர்கள்

அகங்கார கிரந்தியினலே — சமுசாரபந்தத்தினலே,

புத்திரதாராதிகள் — புதல்வர் மனைவி முதலியவர்கள்,

தவிக்கின்றதை — துன்ப மடைகின்றதை

தாம் தவிக்கின்ருேமென்கின்ற — தமக்கு வந்த துன்பமாக அங்கீகரிக்கின்ற

மூடசுரம்போல — அறியாமையைப்போல

இந்த இருபத்தெட்டினுடைய — இங்ஙனங் கூறிய தத்துவங்க ளிருபத்தெட்டி னுடைய

தொழில்களையும் — விவகாரங்களையும்,

தம்தொழில் என்று — தம்முடைய விவகாரமென்று

மயங்குகின்ற படியினலே — பிரமிக்கின்ற படியினலே,



இந்த இருபத்தெட்டினலும் — இங்ஙனங் கூறிய தத்துவங்க ளிருபத்தெட்டினலும்,

ஆர்ச்ஜிக்கப்பட்ட புண்ணிய பாவங்களினல் — செய்யப்பட்ட ஆகாமிய கன்மங்களினல்

கட்டுப்பட்டு — கூடிய ஆவரண சத்தியிற் கட்டுண்டு

அந்தக் கர்மத்தின்படியே — அந்தச் சஞ்சித கர்மத்தின்படியே

சனன மரணதி — உற்பத்தி நாச முதலிய

சம்சாரத்திலே — பந்தத்திலே

அடிபடுகிருேமென்று மயங்குவர் — வருந்துகிருேமென்று, பஞ்சப் பிராந்தியினலும் பிரமிப்பர், அவையாவன — பிரபஞ்சம் சத்தியமென்பது ஒரு பிராந்தி. ஈஸ்வரனுந் தானும் வேறு என்பது ஒரு பிராந்தி. தான் பிரமம் அன்றென்பது ஒரு பிராந்தி. பாவ புண்ணியங்களைச் செய்து, அவைகளுக்குக் கர்த்தா என்பது ஒரு பிராந்தி. இருபத்தொன்பது தத்துவங்களையு மொன்ருகக் கூட்டிப் பிரமம் தானக விருந்தும், தான்

குழப்பித் தான் என்பது ஒரு பிராந்தி. இவைகளே பஞ்சப் பிராந்தியாம்.

பிரம சைதன்னியமே தான் என்றும் — பிரமக் ஞானமே ஆத்மா வென்றும்,

மற்ற முப்பத்தைந்தும் — மற்றத் தத்துவங்கள் முப்பத்தைந்தும்,

தான் அல்ல என்றும் ஆத்மா அன்றெனவும்,

தெளிந்த விவேகி யானவன் — ஆராய்ந்தறிந்த பகுத்தறிவுடையவன்,

அகங்கார கிரந்தி அற்றபடியினல் — சம்சாரபந்தம் நீங்கினபடியினல்

இந்த இருபத்தெட்டினுடைய — இந்த இருபத்தெட்டுத தத்துவங்களி னுடைய

தொழில்களையும் — விவகாரங்களையும்

நான் செய்யவில்லை என்றும் — ஆத்மாவினுடைய விவகாரங்க ளன்றெனவும்,

இந்த இருபத்தெட்டும் — இங்ஙனங் கூறிய



இருபத்தெட்டுத் தத்துவங்களும்,

புசிக் கின்றதை — அனுபவிக்கப் படுகின்றதை

நான் புசிக்கவில்லை என்றும் — ஆத்மாவினலே அநுபவிக்கப்படவில்லை யென்றும்,

திடப்படத்தேறி — நிச்சயமாக வாராய்ந்து,

மயக்கமற்றிருக்கின்றபடியினல் — பிராந்தி நீங்கியிருக்கின்றபடியினல்,

இந்த இருபத்தெட்டினலும் — இங்ஙனங் கூறிய இருபத்தெட்டுத் தத்துவங்களினலும்,

ஆர்ச்சிக்கப்பட்ட — செய்யப்பட்ட

புண்ணிய பாவங்களினின்றும் — தர்மா தர்மங்களிலிருந்தும்,

விடுபட்டு — நீங்கினவனகி

கர்மம் இல்லாதபடியினல் — கர்ம சன்னியமான சம்சாரம் நீங்கினபடியினல்,

சனன மரணாதி — உற்பத்தி நாச முதலிய

சம்சாரம் இல்லாமல் — பந்தமற்று,

முத்தனய் — நான்குஅபாவம் விடுபட்ட நித்தியனய்

பிரம மாந்திர மாகவே இருப்பன் — சிவமாத்திர மாகவே சுகித்திருப்பான்.

இவனை சீவன் முத்தன் என்றும் — இந்த பிரமக் ஞானியை பந்தம் விடுபட்ட நித்திய னெனவும்,

திடப் பிரக்ஞ னென்றும் — மெய்ஞ்ஞானி யென வும்

அதிவர்ணச்சிரமி என்றும் — ஆச்சிரமம் நான் கினுக்கும் அப்பாற்பட்டவ னென்றும்,

குணதீத னென்றும் — சத்துவாதி குணத்திரயமும் அவைகளின் விகாரமும் அற்று, அதீதனயிருக் கின்றவ னெனவும்,

பகவத்பத்தன் என்றும் — பகவானிடத்தில் அன் புடையவ னெனவும்

பிராமணன் என்றும் — பிரம ஸ்வரூபமாகிய தன்னைத் தெரிந்து கொண்டதினல், பிராமண னென வும்,

வாசிட்டம் முதலிய சாஸ்திரங்கள் முறையிடு



கின்றன — வாசிட்ட முதலான வேதாந்த சாஸ்திரங் களிற் பிரதிபாதிக்கப்படுகின்றன.

இங்ஙனங் கூறிய சீவன் முத்தன் முதலிய சடு வித ஞானியின் இலக்கணங்களில், சீவன் முத்தனின் இலக்ஷணமாவது. — யோகி யென்றும் சாங்கிய னென்றும் இரண்டுவிதமா யிருக்கும். இதில் யோகி யினுடைய லக்ஷணமாவன. — சகல பிராணிகளாலும் அநுபவிக்கப்படா நின்ற, இந்த நாம ரூப பிரபஞ்ச முழுவதும், உள்ளிலும் வெளியிலும் (சித்த விருத்தி யில்லாமல்) தோற்றவில்லையோ, சுழுத்தியைப்போல் சகலமும் தன்னிடத்தி லடங்கிச் சொப்பிரகாச மாத் திரமாசப் பிரகாசிக்குமோ, அவன் சீவன் முத்தன். 1 சிற்கு சந்தன வனிதாதி வெகுமானதிகளினல் சுகம் வந்தாலும், தனஹானி புத்திரஹானி அவமானதிக ளினல் துக்கம் வந்தாலும், இவ்வளவு மட்டுக்கும் நமக்குச் சுகம்வந்ததென்று சந்தோஷமும், இப்படி நமக்குத் துக்கம் வந்ததே யென்று விசனமும், சம் சாரியைப்போல் யாதொருத்தனுக்கு உண்டாக வில்லையோ, அவன் சீவன் முத்தன். 2

திடப் பிரக்ஞன் லக்ஷணமாவது. — திடக்ஞான மென்றும், அதிடக் ஞானமென்றும், இருவகைப்படும். இவைகளில், திடக்ஞான மென்றது யாதெனில், சோர புருஷனிடத்தில் அதிகப் பிரியமுள்ள நாரி

யானவள், வீட்டுக் காரிய மெல்லாம் பண்ணின போதும், அவளுடைய புத்தி சோரபுருஷனையே தியானம் பண்ணிக்கொண்டிருக்குமோ, வீட்டுக்காரியம் பிரத்தியக்ஷமாய்ப் பண்ணப்பட்ட போதிலும், அது உடனே மறக்கப்படுமோ, அப்படிப்போல அத்தியந்த வைராக்கிய முள்ளவனையும், தியானப்பியாச பலத்தினலே சுவாதீனப்பட்ட சித்தத்தை யுடைத்தானவ னையும் இருக்கின்ற புருடனுக்குத் தத்துவக்ஞானதிடத்தினல் அவ்னுடைய புத்தியானது, நாரியினுடையபுத்திசோர புருஷனையே நிரந்தரம் தியானம் பண்ணுகின்றதுபோல, நிரந்தரம் தத்துவத்தையே தியானம் பண்ணிக்கொண்டிருக்கும். அந்தக் ஞானம் திடக்ஞான மென்று சொல்லப்படும் அதிடக்ஞான லக்ஷணமாவது. — வைராக்கியம், தியானப்பியாசம், இரண்டுமன்னியில் ஏதோ ஒரு புண்ணிய வசத்தினலே தத்துவக்ஞான முண்டான போதிலும், நாரியானவள் வீட்டுக்காரியத்தை யடிக்கடி மறக்கின்றதுபோல, ஆத்மசொரூபத்தை யடிக்கடி மறக்கின்றவனே அதிடக்ஞானி. திடக்ஞானத்தை யுடையவனே திடப்பிரக்ஞன்.

அதிர்வணச்சிரமிலக்ஷணமாவது. — பிரமசரிய முதலிய சகல ஆச்சிரமங்களுக்கும், எல்லா அதிகாரிகளுக்கும், குருவாக இருப்பானேயொழிய, சீடனாக



விருக்கமாட்டான். பரமசிவனுயிருக்கின்றவர் எப்படி எல்லாருக்குங் குருவோ, ஒருவருக்குஞ் சீடனன்றோ, அப்படிப்போல அதிவர்ணச்சிரமி யென்று அறியுங்கள். ஆனதால் அவரே எல்லாருக்குஞ் சிரேஷ்டன். அவனுக்கு அதிகனுகட்டும், சமனுகட்டும் ஒருவருங் கிடையாது. இதிற் சமுசயமில்லை யாதொருத்தன் சரீர இந்திரியங்களுக்குப் பின்னராயும், அதற்குச் சாக்ஷியாயும், எப்போதும் எல்லாவற்றையும் அறிந்துகொண்டிருக்கின்றபடியினல் சித்து ரூபமாகியும், பரமப் பிரீதிக்கு இருப்பிடமானபடியினல் ஆனந்தரூபனாகியு மிருக்கின்ற பிரத்தியே கான்மா, வேதாந்த மகாவாக்கியங்களினுடைய சிரவண மனன நிதித்தியாசங்களினல், மாயா தற்காரிய மன்னியிலே, சச்சிதானந்த பரிபூரணமா யிருக்கின்ற மகாதேவனாக அறிகின்றானே, அவனே அதிவர்ணச்சிரமி.

குணாதீதன் லக்ஷணமாவது. — சுகதுக்கங்கள், இதற்குச் சாதனமான பிரியாப்பிரிய விஷயங்களின், ஸ்துதி நிந்தைகள், சத்துரு, மித்துரு, மானபிமானம், சுவர்ணம் ஒடு முதலானவைகளில் சமனாகியும், யாதொரு முயற்சியுமன்னியில் வெகு தீரனாய், ஆத்ம நிஷ்டனாய், சத்வாதிகுணத்திரய விகாரங்களாம் பிர

காசம் பிரவிர்த்தி மோக மென்று சொல்லப்பட்ட, ஞானம் முயற்சி அவிவேகம் இந்த மூன்றும் உண்டாகும்போதும், நிவர்த்சியாகும் போதும் மயங்காமல், சர்வசாக்ஷியாய், அசங்க சித்து ரூபனுயிருக்கின்ற நமக்கு. யாதொரு நஷ்டமும் லாபமு மில்லையென்று. உதாசீன குணமாயிருக்கின்றவனே குணுதீதன்.

பகவத்பத்தன் லக்ஷணமாவது. — சர்வ பிராணிகளிடத்திலேயும் துவேஷ மில்லாதவராயும், மைத்திரி கருணை முதிதை உபேக்ஷையுள்ளவராகியும், யா னென தென்னப்பட்ட வகங்கார மமகார மில்லாதவராகியும் சுகதுக்கங்களிற் சமானமானவ ராகியும், திடமாக ஸ்வரூப நிச்சயத்தை யுடையவராகியும், சதா சந்துஷ்டராகியும், சொரூபத்தைத்தானே எப்போதும் தியானம் பண்ணுகிறவராயும், சத்துரு மித்துரு மானுவமானம் சீதோஷ்ணம் முதலானவை வருங்காலங்களில் சமனுகியும், ஸ்துதியும் நிந்தையும் சமனுகப் பார்க்கின்றவராகியும், மௌனியாகியும், ஒருவிடத்திலே நியமமாக வாசம்பண்ணுதவராகியும், சர்வாத்மாவாயிருக்கின்ற பகவானிடத்தில் வாசுதேவோகம் என்கின்ற திடபத்தி யுடைத்தானவனே பகவத் பத்தன்.



பிராமணன் லக்ஷணமாவது. — அரையிலே கட்டிக் கொள்ளுகின்ற சோமனும், மேலுக்குப் போட்டுக் கொள்ளுகின்ற உத்தரீயமும் இரண்டு மின்றி, பாய் முதலானது மில்லாமல், தரையிலே கையைத் தலையணையாக வைத்துக் கொண்டு சயனம் பண்ணுகிறவனுகியும், குப்பையிலே கிடக்கிற கந்தையைக் கௌபீனமாகத் தரித்துக்கொள்ளுகிறவனுகியும், பிராரத்த கன்மந்தால் வரப்பட்ட பிக்ஷயன்னத்தினல் தேகதாரணம் பண்ணுகிறவனுகியும், தண்டதாரியாயும், ஏகாங்கியாயும், சாந்தனுயும் யாதொரு பிரமக்ஞானி யுண்டோ, அவனே பிராமணன்.

ஆறுசாத்திரங்களாவன, — சாங்கியம், யோகம், நியாயம், வைசேடிகம், மீமாஞ்சை, வேதாந்தம் இவற்றின் ஆசிரியர்கள் முறையே கபில முனிவர், பதஞ்சலி முனிவர், கௌதமமுனிவர், கணுதமுனிவர். சைமினிமுனிவர், வியாச முனிவர் ஆவார்கள்.

*கௌதம முனிவர் அக்கபாதர் எனவும் பெ
பெறுவர்

இந்தப் பிரகாரம் நாநாஜீவவாதக்கட்டளை யின
பதம் பதார்த்தமும், விசேடார்த்தமும் பிரதிபா
கப்படுகின்றன.

சகலரும் இந்தத் தத்துவங்களை விசாரம் பண்ண
மோக்ஷமடையக்கடவர்.

சேஷாத்திரி சிவனார் அருளிச்செய்த நாநாஜீவ
வாதக்கட்டளைக்கு நமது பரம சற்குரு சுவயம்
காச சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளிய பதார்த்
மும், விசேடார்த்தமும் சம்பூரணமாயிற்று.

ஸ்ரீ அகண்டபரிபூரண சச்சிதானந்த ஸ்வரூப
மானிடச் சட்டை தாங்கி யெழுந்தருளிய நமது பரம
சற்குருவாகிய ஸ்வயம்பிரகாச ஸ்வாமிகளது செந்தா
மரை மலர் போன்ற உபயதிருவடிகளுக்கு நமஸ்கா
ரம்! நமஸ்காரம்!! நமஸ்காரம்!!!

நாநாஜீவவாதக்கட்டளை அர்த்ததீபிகை
சம்பூரணம்.

சுபம்! சுபம்!! சுபம்!!!

## தத்துவங்களின் ஸ்தானம் தேவதை தொழில் இவைகளைக் காட்டுவன.

| | கரணம் | ஸ்தானம் | தேவதை | தொழில் |
|---|---|---|---|---|
| அந்தக்கரணப் | உள்ளம் | சிரம் | சதாசிவன் | கேள்விகளை தரித்தல் |
| | மனம் | கண்டம் | சந்திரன் | சங்கற்பவிகற்பம் |
| | புத்தி | இருதயம் | பிர்மா | நிச்சயித்தல் |
| | சித்தம் | நாபி | விஷ்ணு | சிந்தித்தல் |
| | அகங்காரம் | சர்வாங்கம் | உருத்திரன் | அபிமானித்தல் |
| ஞானேந்திரியங்கள் | சுரோத்திரம் | செவி | திக்கு | சப்தக்கிரகணம் |
| | துவக்கு | தோல் | வாயு | ஸ்பரிசக்கிரகணம் |
| | சட்சு | கண் | சூரியன் | ரூபக்கிரகணம் |
| | சிங்குவை | நாக்கு | வருணன் | ரஸக்கிரகணம் |
| வாயுக்கள் | வியானன் | சர்வாங்கம் | விஸ்வயோனி | வியாபித்தல் |
| | பிராணன் | இருதயம் | விசிஷ்டன் | உஸ்வாசநிஸ்வாசம் |
| | அபானன் | குதம் | விஸ்வகர்த்தா | ஜீர்ணிப்பித்தல் |
| | சமானன் | நாபி | க்ஷயன் | ரசங்களை இழுத்தல் |
| | உதானன் | கண்டம் | பிர்ம்மா | கடைதல் |
| கர்மேந்திரியங்கள் | வாக்கு | வாய் | அக்கினி | வசனித்தல் |
| | பாணி | உள்ளங்கை | இந்திரன் | தான ஆதானம் |
| | பாதம் | உள்ளங்கால் | உபேந்திரன் | கமனுகமனம் |
| | பாயுரு | குதம் | மிருத்யு | விசர்ச்சனம் |
| | உபஸ்தம் | குய்யம் | பிரஜாபதி | ஆனந்தித்தல் |

